


# ஏ. ஆர். இராஜராஜவர்மா

கே. எம். ஜார்ஜ்



இந்திய
இலக்கியச்
சிற்பிகள்

உள் அட்டையில் காணும் சிற்பக் காட்சியில் பகவான் புத்தரின் அன்னை மாயாதேவி கண்ட கனவின் பலனை, மன்னர் சுத்தோ-தனருக்கு நிமித்திகர் மூவர் விளக்குகின்ற-னர். அவர்களுக்குக் கீழே அமர்ந்து அந்த விளக்கத்தை, எழுதுகிறார் ஓர் எழுத்தாளர். எழுதும் கலையைச் சித்தரிக்கும் முதல் இந்-தியச் சிற்பம் இதுவாகவே இருக்கலாம்.

(நாகார்ஜுன மலைச் சிற்பம் — கி. பி. இரண்டாம் நூற்றாண்டு.

பட உதவி : நேஷனல் மியூசியம், புது தில்லி).

இந்திய இலக்கியச் சிற்பிகள்

# ஏ. ஆர். இராஜராஜவர்மா

ஆசிரியர்

கே.எம். ஜார்ஜ்

மொழிபெயர்ப்பு

ஏ.எஸ். இளங்கோவன்,



சாகித்திய அக்காதெமி

*A.R. Raja Raja Varma*.-Tamil translation by A.S. Ilangovan of K.M. George's monograph in English. Sahitya Akademi, 1993.

ISBN 81-7201-247-0



முதல் பதிப்பு : 1993

**சாகித்திய அக்காதெமி**

ரவீந்திர பவன், 35, பெரோஸ்ஷா சாலை, புது தில்லி 110 001
சுவாதி மந்திர் மார்க், புதுதில்லி110 001
ஜீவன்தாரா பில்டிங், 4வது மாடி, டைமண்ட ஹார்பார் ரோட், கல்கத்தா 700 053.
குணா பில்டிங், 304, 305 அண்ணா சாலை சென்னை 600 18
109 J.C ரோட் பெங்களூர் 560 002
பம்பாய் மராத்தி கிரந்த சங்கிராலய சாலை, தாதர். பம்பாய் - 400 014

விலை : ரூ.... 15/-

**Printed at: ELEGANT PRINTING WORKS, Bangalore-4.**

# நன்றி

இதன் கையெழுத்துப்படியை வாசித்துப் பயன்மிக்க கருத்துரைகளை வழங்கியமைக்காக டாக்டர் கே.பி.கே. மேனன் மற்றும் டாக்டர். அய்யப்ப பணிக்கருக்கு என் மனமார்ந்த நன்றிகள் உரியன. ஏ.ஆர். இராஜராஜவர்மாவின் புதல்வர் பேராசிரியர் ஆர். இராகவவர்மா தம் தந்தையின் குடும்ப வாழ்க்கை மற்றும் இலக்கிய விசயங்கள் குறித்த சந்தேகங்கள் சிலவற்றைத் தெளிவாக்கியமைக்காக அவருக்கும் என் மனமார்ந்த நன்றி உரியது.

கே.எம். ஜார்ஜ்

| பகுதி | உள்ளடக்கம் | பக்கம் |
|---|---|---|

## பகுதி ஒன்று

# சமூகப் பின்னணி

பல நூற்றாண்டுகளாகச் செழித்து வளர்ந்திருக்கும் எந்த இலக்கியத்தின் வரலாற்றையும் ஆராய்ந்து பார்த்தோமானால், மேடும் பள்ளமும், சிறப்பான படைப்புக்கள் வளர்ந்து செழிக்கும் காலமும் வறண்ட வலுவற்ற காலகட்டமும் மாறி மாறி வந்திருப்பதை நாம் காணலாம். வளர்ச்சி ஒரு நேர்கோடு போலத் தொடர்ந்திருக்காது. எழுச்சிக்காலமும் தளர்ச்சிக் காலமும் ஒன்றன்பின் ஒன்று மாறி வரும். இந்தப் பொது விதிக்கு மலையாள இலக்கியமும் விலக்கல்ல. மலையாள இலக்கியத்தின் சிறந்த உச்ச கட்டங்கள் செருசேரி (15ம் நூற்றாண்டு), துஞ்சத்து எழுத்தச்சன் (16ம் நூற்றாண்டு), குஞ்சன் நம்பியார் (18ம் நூற்றாண்டு) மற்றும் உண்ணாயி வாரியர் (18ம் நூற்றாண்டு) போன்ற மேன்மையாளர்களைச் சுற்றியே எழுந்தன. இந்தப் பெரும் கவிஞர்களின் படைப்புக்கள் மரபு சார்ந்த கட்டமைப்பு, உள்ளடக்கம் மற்றும் கருத்துக்களில் தனித்துவம் படைத்து நிற்கின்றன. இவர்களுக்குப் பின் திறம் குறைந்த எழுத்தாளர்கள் தோன்றினர். இவர்களில் பெரும்பாலோர் உயர்ந்த கவிஞர்களின் பெருங்காவியங்களைக் கண்மூடித்தனமாக நகல் பார்த்தெழுதும் முயற்சிகளையே செய்தனர்.

மலையாள இலக்கியத்தின் தொடக்க காலம் சிறந்த காவியமான செருசேரி நம்பூதிரியின் 'கிருஷ்ணகதா' எழுதப்பட்ட 15ம் நூற்றாண்டுக்கு முன்னைய காலகட்டம் தான் என்பதில் பொதுவாக உடன்பாடுள்ளது. இந்தக்

காலகட்டத்தில் இலக்கிய மலையாளம் உருவாகி வரும் நிலையையும் வளர்ந்த இலக்கியங்களான தமிழும் சமஸ் கிருதமும் அதன் மேல் செலுத்தும் வலுவான தாக்கத்தை யும் காணலாம். அதே நேரத்தில் இந்தக் காலகட்டம், நாட்டுப் பாடல்களில் செழிப்பான ஒரு பாரம்பரியத்தை வழங்கியிருப்பதையும் பாடல்களின் மொழி நடை பெரும்பாலும் பேச்சு வழக்காக அமைந்திருப்பதையும் காணலாம். உண்மையாக நோக்கும் போது, கேரளத்துக் கென்று செம்மைநிறைந்த மொழி நடையை வடிவமைப் பதில், மூன்று தனித்துவம் நிறைந்த இலக்கியக்குழுக்கள் பங்கெடுத்துள்ளன. அவை (1) உள்நாட்டுப் போக்கு (2) தமிழ் வழிமுறை (3) சம்ஸ்கிருத வழிமுறை ஆகியன. இராமசரிதத்தில் அமைந்திருப்பது போன்ற 'பாட்டு' வகைப்படைப்பு பழமையான தமிழ்ப்போக்கைக் காட்டு கிற சமயத்தில், தொடக்க கால 'மணிப்பிரவாள' படைப் புகள் சம்ஸ்கிருத வழிமுறையைச் சார்ந்துள்ளன.

இந்த சமகாலத்திய மூன்று போக்குகளும் பண்பி லும் ஆழமான இலக்கியச் செழுமையிலும் வேறுபட்டி ருந்தாலும் ஒன்றுக்கொன்று தாக்கத்தை ஏற்படுத்தின.

முதலாவது போக்கு இந்த மண்ணுக்குச் சொந்தமா னது. மேம்போக்காகவும் கருத்து நயம் குறைந்தும் இருந் தாலும், தெளிவாகவும் வேகமிக்கதாகவும் ஓடியது. இரண்டாவது, கருத்து நயமும் ஓசை முழக்கமும் உடை யதாயிருந்தது. மூன்றாவது ஆழமும் கொந்தளிப்பும் வளைந்து நெளிந்து செல்லும் போக்கும் உடையதாய்ச் சில மேதைகளுக்கு மட்டுமே உகந்ததாய் இருந்தது. இந்த மூவகைக் கலப்பு 14ம் நூற்றாண்டில் 'உண்ணு நீலி சந்தேசம்' மற்றும் 'கண்ணசன்' பாட்டுகளில் தெளிவாகத் தெரிகிறது. இருந்தாலும், மூன்று வகை நடைகளும் நலம் பெற இணைந்து பேச்சு மொழி நடையுடன் இசைந்து ஒரு புதிய நடை உருவாகியதை 'கிருஷ்ண கதா' காவி யத்தில் காண முடிகிறது.

பிற மொழிக் கூறுகளில் குறிப்பாக சம்ஸ்கிருத மொழியில் சிறந்தவற்றை ஒப்புக்கொண்டு ஒருங்கிணைத் துக்கொள்கிற போக்கு துஞ்சத்து எழுத்தச்சன் படைப் பில் உச்சத்தை எட்டியது. அவர் காவிய மலையாளத்தைப் பரவலாக விரும்புகிற அளவுக்கும் கருத்தாழம் செறிகிறஅளவுக்கும் உருவாக்கினார். அவரு டைய இராமாயணம் மற்றும் மகாபாரதம் காவியங்க ளின் தன்னிகரற்ற இலக்கிய மேன்மைக்கும் ஆன்மீகத் தெளிவுக்கும் மலையாள வாசகர்கள் என்றும் கடமைப் பட்டிருக்கின்றனர்.

இந்த இலக்கியத் தொடரின் அடுத்த உச்சிச் சிக ரத்தை நாம் காண்பதற்கு ஒரு நூற்றாண்டுக்கு மேல் செல்கிறது. உண்மையில் நாம் இரண்டு சிகரங்களைக் காண்கிறோம். முதலாமவர் கதகளி இலக்கியத்தின் தந்தை உண்ணாயிவாரியர். இவருடைய 'நளசரிதம் ஆட்டக்கதா' நாடகப் பண்புகள் மிளிர தனித்தன்மை விளங்க நான்கு நாட்களில் நடிக்கப் படுகின்ற விதத்தில் இயற்றப்பட்டது. கதகளி பெருமைமிக்க கலைவடிவமாயி ருந்தாலும் அதனை முழுமையாக ரசிக்க நுண்கலைத் திறம் தேர்ந்து நுகரும் நிபுணர்கள் தேவையாயிருந்தனர். அறிவு நலமும் ஆர்வத்திறமும் வாய்ந்த குஞ்சன் நம்பி யார் பொது மக்களின் தேவையை உணர்ந்து 'துள்ளல்' என்னும் கலைவடிவத்தை உருவாக்கினார். உயர்நிலை யில் உள்ளோரும் பொதுமக்களும் சம ஆர்வத்துடன் நுகரும்படி 'துள்ளல்' இலக்கியப்படைப்புக்களை மிகுதி யான அளவில் படைத்தார். நம்பியார் புராணக்கதைக ளையே பயன்படுத்தினாலும் ஒவ்வொரு கதையையும் ஒவ்வொரு தொடரையும் நடப்புக்காலத்துக்குப் பொருந் தும் விதத்திலும் பெருமகிழ்ச்சி தரும் விதத்திலும் அமைக் கும் அறிவுத்திறம் பெற்றிருந்தார். அவரது காலம் 18ம் நூற்றாண்டு.

இந்த மேதைகள் தம் தனித்தன்மையால் மாமூலான

வடிவங்களிலிருந்து உயர்ந்து திறம்பெற்ற சொந்தச் சிந்தனைகளை வழங்கினர். குஞ்சன் நம்பியாருக்கும் 19ம் நூற்றாண்டுக்கும் இடைப்பட்ட காலம் மலையாள இலக்கிய வரலாற்றில் பிற பகுதிகளோடு ஒப்பிடுகையில் ஒரு வறண்ட காலமாகும்.

அதற்குப்பின்னர் பல எழுத்தாளர்கள் தோன்றிப் பழைய தேய்ந்த பாதையாகிய சம்ஸ்கிருத மரபிலேயே சென்றனர். மகாகாவியம், சம்பு, சந்தேச காவியம் ஆகியன அவர்கள் பயன்படுத்திய பழங்கலைவடிவங்கள் ஆகும். மேலை நாட்டு இலக்கியத் தாக்கத்தையும் அடுத்தடுத்துக் காண்கிறோம். சிலர் சம்ஸ்கிருதச் சொற்களும் அமைப்புகளும் இணைந்த அலங்கார நடையைப் பரப்பினர். மற்றவர்கள் பேச்சு நடையின் வேகத்தையும் உயிரோட்டத்தையும் விரும்பிக் கலப்பற்ற மக்கள் மொழியைத் தேர்ந்தெடுத்துக் கொண்டனர்.

## இலக்கியத்தின் பொற்காலம்

1850க்குப் பின்னர் வந்த அறுபதாண்டுகளில் கவிதை மற்றும் உரைநடையில் பெருஞ்சிறப்புமிக்க எழுத்தாளர்கள் பலரைக் காண்கிறோம். அவர்களுள் மிகச் சிறந்தவர்கள்.

கேரள வர்மா 1845-1915 கவிஞர், அறிஞர்
ஏ. ஆர். இராஜராஜவர்மா 1862- 1918 அறிஞர், திறனாய்வாளர்

| | |
|---|---|
| கொடுங்கல்லூர் குஞ்சிக்குட்டன் தம்புரான் (1865-1913) | கவிஞர் மொழிபெயர்ப்பாளர் |
| சந்துமேனன் 1847-1900 சி.வி. இராமன்பிள்ளை (1858-1922) | நாவலாசிரியர்கள் |
| குமரன் ஆசான் (1873-1924)<br>உள்ளூர் (1877-1949)<br>வள்ளத்தோல் (1878-1958) | நவீன காலக் கவிஞர்கள் |

இவர்கள் அனைவரும் 19ம்நூற்றாண்டில் பெரும் பாலும் அதன் பிற்பாதியில் தோன்றியவர்கள் என்பதை யும் இவர்களது சிறந்த படைப்புக்கள் 1880 முதல் 1930க்குள் வெளிவந்தன என்பதையும் நாம் காண்கி றோம். மலையாள இலக்கியத்தின் மறுமலர்ச்சிக் காலம் என இதனைக் கருதலாம். பொதுவாகச் சொல்லுமிடத் தில் மலையாள இலக்கியத்தின் பொற்காலம் 1850குப் பின்னர் வந்த நூறு ஆண்டுகள் எனலாம்.

நாம் எட்டுப் பெயர்களையே குறிப்பிட்டிருந்தா லும், இன்னும் பலர் மகத்தான பங்காற்றியுள்ளனர். மலையாள இலக்கியச் சோலையில் நூற்றுக்கணக்கான மலர்கள் பூத்துக் குலுங்கி அக்காலத்தை ஓர் உண்மை யான வசந்த காலமாக ஆக்கின. புதிய கருத்துக்களையும் வடிவங்களையும் புதிய அணுகுமுறைகளையும் புதிய பார்வைகளையும் அறிமுகப்படுத்திப் பரவலான விழிப் புணர்வுக்குப் பலர் பங்காற்றியிருந்தாலும் உண்மையான முன்னோடிகள் ஒரு சிலரே. அவர்களுள் கேரளவர்மா வலிய கோயில் தம்புரான் மற்றும் அவரது மருமகன் ஏ.ஆர்.இராஜராஜவர்மா தம்புரான் இருவரும் தன்னிக ரற்ற இடம் பெற்றுள்ளனர். புதிய இலக்கியக் காலத்தின் மிக உயர்ந்த படைப்பாளிகள் என்னும் அங்கீகாரத்தை இவர்கள் பெற்றுள்ளனர்.

கேரளவர்மா 'சாகித்ய சாம்ராட்' இலக்கியப் பேர ரசர் எனக் கருதப்பட்டார். சம்ஸ்கிருதத்திலும் மலையா ளத்திலும் அவருக்கிருந்த ஆழ்ந்த புலமை, கவித்திறம், கல்வி இலக்கியச் சேவையில் இருந்த ஆர்வம், அரச குடும்பத்தின் நெருங்கிய உறவினர் என்னும் முறையில் அவருக்கிருந்த மரியாதை ஆகிய அனைத்தும் இணைந்து அவருக்கு முன்னும் பின்னும் யாரும் அடைந்திடாத மாண்பை அவருக்கு நல்கின. கவிஞர் என்கிற முறையில் சம்ஸ்கிருத மரபின் அழகையும் கருத்தாழத்தையும் உணர்ந்

திருந்தார். ஆனால் ஆங்கில முறைக்கல்வியின் செல்வாக்கையும் பெற்றிருந்ததால் பாடநூல் நிறுவனத்தின் உறுப்பினர் என்னும் முறையில் அவர் எளிமையான நேரடியான உரைநடைப்படைப்புகளையே மாணவர்கள் கற்குமாறு ஊக்குவித்தார். ஆனால் அவர் தாம் உயர் கல்வி பெற்ற அறிஞர்களுக்காக எழுதும் போது அலங்காரமான வடிவமைக்கப்பட்ட நடையை, அவருடைய 'அக்பர்' நாவலில் உள்ளது போலப் பயன்படுத்தினார். ஏ.ஆர். இராஜராஜவர்மா ஓர் இலக்கண நிபுணர், கவிஞர் மற்றும் திறனாய்வாளர். தன் மாமாவின் மேல் மிகுந்த மதிப்பு வைத்திருந்தார். ஆனால் இலக்கியத்தைப் படைப்பதிலும் மதிப்பிடுவதிலும் அடங்கியுள்ள பல்வேறு கூறுகள் பற்றியும் அவர்களுக்குள் அடிப்படையான வேறுபாடுகள் இருந்தன. அணியிலக்கணம், கற்பனை, சம்ஸ்கிருத மரபின் தேவை ஆகியன பற்றிய இருவரது நிலைகளையும் இனிவரும் பக்கங்களில் ஆராய்வதற்கு வாய்ப்பிருக்கிறது.

மகாகவி உள்ளூர் எஸ். பரமேஸ்வர அய்யர் தமது விரிவான மலையாள இலக்கிய* வரலாற்றில் இராஜராஜவர்மாவின் வாழ்வையும் சாதனைகளையும் கீழ்வருமாறு பதிவிட்டுள்ளார்.

"மற்ற எழுத்தாளர்கள் மலையாள இலக்கிய மாளிகையின் சுவர்களைத் தங்கள் சித்திரங்களால் அழகு செய்துள்ளபோது ஏ.ஆர். அதன் அடித்தளத்தையும் கோபுரத்தையும் வலுவாக்கி அதனை நெடுங்காலம் நிலைத்திருக்கவும் மகத்தானதாக உருவாகவும் வழி செய்து கேரளமக்களுக்கு நன்மை செய்தார். அவர் புகழ் இந்த கட்டமைப்பின் சிறப்பு நுணுக்கத்தில் நின்று என்றும் வளரும். நவீன காலத்தில் கேரளத்தில் இத்தகைய கூர்ந்த அறிவு, தனித்திறம் மற்றும் நுண்மாண்நுழைபுலம் வாய்ந்தவர்கள் எவருமில்லை. இத்தகைய மாண்புமிக்க மனிதர்

* கேரள சாகித்ய சரித்திரம் தொகுதி 5

கள் எங்கும் எப்போதும் கூட அரிதாகவே காணப்படு கின்றனர்.'

## பகுதி இரண்டு
## உருவாகிய ஆண்டுகள்

நம் நூலின் நாயகரின் முழுப் பெயர் ஏ.ஆர்.இராஜ ராஜவர்மா கோயித்தம்புரான். ராஜா வர்மா, தம்புரான்[1] தம்புரான் கோயித்தம்புரான் (கோயில தம்புரான்)[2] ஆகிய சொற்கள் அரச குடும்பங்களைச் சேர்ந்தவர்களைக் குறிப்பிடுவதுடன் ஆளும் வாக்கமான சத்திரியர்களுடன் நெருங்கிய தொடர்புள்ளதையும் குறிக்கின்றன. இந்தச் சொற்கள் மலையாள இலக்கியத்தில் பெருமையுடன் விளங்குகின்றன. இது கேரள கலைவாழ்வில் இந்தச் சிறிய இனம் எவ்வளவு பெரும் பங்காற்றியுள்ளது என்பதை விளக்குகிறது. இராஜராஜவர்மா **1863**ம் ஆண்டு, திருவனந்தபுரத்திற்கு 140 கிலோமீட்டர் வடக்கில் உள்ள மக்கள் தொகை நிறைந்த சங்கணாசேரியில் உள்ள இலட்சுமிபுரம் அரண்மனையில் பிறந்தார். மலபார் ஆண்டுக் கணக்கின்படி 1038ம் ஆண்டு கும்பம் மாதம் 9ம் நாளில் பிறந்தார். அரச குடும்பத்தில் பிறந்தவர்களுக்கு அவர்கள் பிறந்த நட்சத்திரத்தின் பெயரை வைப்பது வழக்கமாயிருந்தது. இவர் பூரட்டாதி (பூர்வபத்ரம் 25ம் நட்சத்திரம்) நட்சத்திரத்தில் பிறந்தார். சங்கணாசேரியின் கோயித்தம்புரான்கள், பாரம்பரியப் பண்பாட்டுக்கும் பெருமைக்கும் பெயர் பெற்ற தெற்கு மலபாரிலுள்ள பரப்பூர் ஸ்வரூபம் குடும்பத்தின் உறவுத் தொடர்புள்ளவர்கள். 1768ல் ஹைதர் அலியின் படையெடுப்புக்குத் தப்பிச் சென்று வாழ மலபாரிலிருந்து திருவாங்கூர்ப் பகுதிக்கு பெருமளவில் குடும்பங்கள் இடம் பெயர்ந்ததை வரலாறு குறிப்பிடுகிறது. பெருந்தன்மை மிக்க திருவாங்கூர் மகாராஜா, அவர்களை மிகவும் நன்றாகப் பரிந்து நடத்தியதால் அமைதி திரும்பிய பிற

[1] தம்புரான்-பிரபு-ஒரு மரியாதை அடைமொழி
[2] கோயில்இறைவன் திருக்கோவில்கள் மற்றும அரசகுடும்பங்கள்
கோயித்தம்புரான்இளவரசியை மணம் செய்தவரைக் குறிக்கும் சொல்.

தும் பலர் திரும்பிச் செல்ல விரும்பவில்லை. அது மட்டு மன்றி, பெருந்தன்மையும் நலம் வழங்குதலும் மெல்ல மெல்ல அரசு குடும்பத்தின் சில கிளைக்குடும்பங்களுடன் திருமணத் தொடர்பு கொள்ள அழைக்கப்படுமளவுக்கு வளர்ந்தது. அத்தகைய குடும்பங்களில் இராஜராஜ வர்மாவின் குடும்பமும் ஒன்று.

இராஜாராஜவர்மா, மிக உயர்ந்த பண்பாட்டு மேன்மையுள்ள பெற்றோருக்குப் பிறந்தார். அவரது தாய் குஞ்சிக்காவுத்தம்புராட்டி, சாகித்ய சாம்ராட் கேரளவர்மாவின் பெரியம்மா மகள் ஆவார். அவர் உயர்ந்த பண்புநலம் மிக்கவர். அவரது தந்தை வாசுதே வன் நம்பூதிரி பட்டியல் இல்லத்தைச் சார்ந்தவர். சிறந்த வேதவித்து. குறிப்பிடத்தக்க நகைச்சுவையுணர்வு கொண்டவர். அந்த நாட்களில் நம்பூதிரிகள், சத்திரியர் மற்றும் நாயர் இனத்துப் பெருமைமிக்க குடும்பங்களில் மணத் தொடர்பு கொண்டிருந்தனர்.

இராஜராஜவர்மா சிறு வயதில் கொச்சப்பன் (சிறிய அப்பன்) என அழைக்கப்பட்டார். அவருக்கு இரண்டு வயதாகும்போது இலட்சுமிபுரம் அரண்மனை யில் ஏற்பட்ட கடுமையான கருத்து வேறுபாடுகள் மற்றும் தகராறுகளால் குடும்பத்தில் சிலர் சங்கணாசேரியி லிருந்து இருபது மைல் தொலைவிலுள்ள கார்த்திகப் பள்ளி என்னும் ஊருக்குக் குடிபெயர்ந்தனர். அங்கே கேரளவர்மாவும் அவரது அண்ணன் இராஜாராஜவர்மா வும் பல தொல்லைகளை எதிர்நோக்க நேர்ந்தது. அதற் குப் பின்னர் அப்போது ஆட்சி செய்த மகாராஜாவின் உதவியால் ஹரிபட் ஊரில் ஒரு புதிய வீட்டுக்குக் குடி யேறினர். புதிய வீடு ஆனந்தபுரம் அரண்மனை என அழைக்கப்பட்டது. இங்கேதான் நம் இளைய கதாநாயகர் தம் பிள்ளைப் பருவத்தைக் கழித்தார்.

அறிவு நலம் மிக்க மாமன்மார்கள், அன்பான அன்னை ஆகியோரின் அன்பான கவனிப்பில் மிக

மகிழ்ச்சியாக இந்தக் காலம் சென்றதென்றாலும் கொச்சப்பன், உயிராபத்தான இரண்டு விபத்துக்களைச் சந்திக்க நேர்ந்தது. வீட்டுக்கு அருகில் உள்ள பெரிய ஆழமான குளத்தில் மழைக்காலத்தில் தன்வயது உறவினருடன் படகுச் சவாரி செய்ய விரும்பினார் கொச்சப்பன். பையன்களுக்கு உதவியாகப்படகில் ஒரு வேலைக்காரப் பெண்மட்டும் இருந்தாள். அந்தச் சிறிய படகு கவிழ்ந்தது. மூவரும் படகிலிருந்து தூக்கியெறியப்பட்டனர். அவர்கள் மீட்கப்பட்டபோது கிட்டத் தட்ட உயிர்போகும் தறுவாயிலிருந்தனர். நல்லவேளையாக உடனடியாகச் சரியான முதல் உதவி செய்யப்பட்டதால் உயிர் தப்பினர். கொச்சப்பனுக்கு அப்போது ஏழு வயது. பல ஆண்டுகளுக்குப் பின்னர், இந்த மோசமான நிகழ்ச்சியையும் சிறுவர்களைக் குளத்துக்கு அழைத்துச் செல்லும் போது அலட்சியமாக இருந்ததற்காக வீட்டுப்பெண்கள் வாங்கிய வசவுகளையும், கொச்சப்பன் நினைவு கூர்ந்து கூறினார்.

இரண்டாவது நிகழ்ச்சி பாம்புகள் திரியும் தோப்பில் இவர் ஓடி விளையாடியபோது நடைபெற்றது. தன் வலதுகால் ஏதோ கூர்மையான ஒன்றை மிதித்தது போல உணர்ந்தார். கொஞ்ச நேரத்தில் கால் கனமாவதாக உணர்ந்தார். இருந்த போதிலும் வீட்டுக்கு ஓடினார். பெரியகாயம் ஒன்றும் காலில் இல்லை. ஆனால் தொடர்ந்த வலியும் கால் விரைத்துப் போவதும் இருந்தன. உறுதியாக அது பாம்புக் கடிதான். எப்படியோ, சிறுவர் அதிசயமாகத் தப்பிவிட்டார்.

## தொடக்ககாலக் கல்வி:

இராஜராஜவர்மா தன் தொடக்க காலக் கல்வியைப் பாரம்பரிய முறையில் புகழ்பெற்ற ஆசிரியர்களிடம் பெற்றார். இவருடைய முதல் குருக்கள், சுனக்கரா அச்சுதவாரியர் மற்றும் சங்கர வாரியர் ஆவர். அவர்கள் எழுத்து, வாசிப்பு, எண்ணறிவு ஆகிய (மூன்று Rஆர்கள்)[3] அடிப்படைத் திறங்களைக் கற்பித்தனர். அடுத்த நிலை

[3] மூன்று ஆர்கள அடிப்படைக்கல்வியைக் குறிக்கும் ஆஙகில மரபு
Reading, Writing, Arithmetic

சம்ஸ்கிருத காவியங்களைப் படிப்பதாகும். சிறுவரான இவர் குறும்பும் விளையாட்டுத் தனமும் நிறைந்தவராயிருந்தார்.

படிப்பைக் காட்டிலும் அவரது கவனம் விளையாட்டிலேயே அதிகம்சென்றது. அனைவரும் விரும்பிய உள்ளூர் விளையாட்டுக்களில் அவர் பெற்றிருந்த திறம் மற்ற இளைஞர்களின் தலைவராக அவர் அங்கீகரிக்கப்பட வழி செய்தது. உடல் வலுமிக்க இவர் தம் தோழர்களை எளிதில் வென்று காட்டினார். படிப்பிலே அதிக் நேரம்செலவழிக்காத போதும் கூட, ஆசிரியர் கற்பித்ததை ஒரு கணத்தில் கற்றுத் தேறும் வேகமிக்க அறிவு நலமும், புரியும் திறமும் இருந்ததால் ஆசிரியர்களும் இவரை நேசித்தனர்.

இந்தக் காலகட்டத்திற்குள் இராஜராஜவர்மாவுக்குப் 18 வயது மூத்த இவரது மாமா கேரளவர்மா ஒரு உயர்திறம்வாய்ந்த நாடறிந்த எழுத்தாளராக ஆகியிருந்தார். ஆனாலும் ஆட்சிபுரிந்த இளவரசருடன் ஏற்பட்ட கருத்து வேறுபாட்டால் வீட்டுச் சிறையில் வைக்கப்பட்டிருந்தார்.ஆகவே அவர் ஆலப்புழையிலிருந்து ஹரிபட் நகருக்கு அனுப்பப்பட்டிருந்தார். இந்தச் சோக நிகழ்ச்சி காலம் செல்லச் செல்ல மலையாள இலக்கியத்துக்கு நன்மைதருவதாகவே முடிந்தது. புகழ்மிக்க மாமாவிடமிருந்தே நேரடியாக சம்ஸ்கிருதத்தையும் பாடல் இயற்றுவதற்கான யாப்பிலக்கணத்தையும் இராஜராஜவர்மா கற்றுக் கொண்டார். இராஜராஜவர்மாவின் ஆளுமை வளர்ச்சி சரியானமுறையில் அமையவும் நூற்கல்வியை நன்குணரும் மனப்பாங்கு பெறவும் இது உதவியது. மேலும் இந்தக் கசப்பான அநுபவம் மயூர சந்தேசம் என்னும் புகழ்பெற்ற தூதுக் கவிதையைக் கேரளவர்மா எழுதக் காரணமாக அமைந்தது. இந்தச் சிறுகாவியம், தன் துணைவியிடமிருந்து அரச கோபத்தால் பிரித்து வைக்கப்பட்டபோது துணைவிக்குச் செய்தி சொல்லி

அனுப்புவதாக எழுதப்பட்டது. இராஜராஜவர்மா 1875 முதல் 1881 வரை முழுதாக ஆறு ஆண்டுகள் காவியங் களைக் கற்றுக் கொள்ளுவதற்கும் கவிதை புனையக் கற்றுக் கொள்ளுவதற்கும் தன் மாமாவின் உதவியையும் வழிகாட்டுதலையும் பெற்றார். நெருங்கிய உறவினர்க ளான மற்றும் இருவரும் சீடர்களாக இருந்தனர். பாடங் கள் கற்பிக்கப்பட்ட முறையையும் இராஜராஜவர்மாவின் திறமை மெருகேறிய விதத்தையும் ஒரு குறிப்பிட்ட நிகழ்ச்சியை எடுத்துச் சொல்வதன் மூலம் காணலாம்.

ஒருநாள் குரு தன் மூன்று மாணவர்களையும் ஓர் அஷ்டகம் (எட்டுச் செய்யுள்கள்) கணபதியின் மேல் இயற்றி மறுநாள் மாலை 3 மணிக்குள் அவரிடம் காட்ட வேண்டுமெனக் கட்டளையிட்டார். மற்ற இரு சீடர்களும் உடனே பணியைத் தொடங்கினார்கள். கடும் முயற்சி செய்து தலைஸ்யப் பிய்த்துக் கொண்டு செய்யுள் இயற்ற முயன்றார்கள். விளையாட்டுப் போக்குள்ள கொச்சப் பன் கடைசி நிமிடம்வரை இதைப்பற்றிக் கவலைப்பட வில்லை. மறுநாள் இரண்டு மணிக்கு இவருக்கு நினைவுவந்தது. உடனே ஏதோ வேகமாக எழுதத் தொடங்கினார். குறித்த நேரத்துக்குக் குருநாதர் வந்தார். இராஜராஜாவர்மா தன் தோழர்களுடன் தொடர்ந்து சென்றார். எழுத முடியாமல் தடுமாறிய முதல் மாணவர் மன்னிக்கப்பட்டார். இரண்டாமவர் அவரது பணியைத் திருப்தியாக நிறைவேற்றியமைக்காகப் பாராட்டப்பட் டார். தயக்கமும் பதற்றமும் பின்னிழுக்க மெதுவாக் முன்னேவந்தார் இராஜராஜவர்மா. அஷ்டகத்தை வாசிக் குமாறு கூறினார் குரு. தயக்கத்துடன் வாசித்தார், மாண வர். அவரை மீண்டும் வாசிக்குமாறு கூறினார் குரு. பின்னர் குருவே இயற்றிய அஷ்டகத்தைக் கொண்டுவரச் சொல்லி குரு வாசித்தார். குருவும் சீடரும் ஒருவரை ஒருவர் பார்த்துப் புன்னகை செய்துகொண்டனர். கார ணம் இருவரது படைப்புக்களும் உருவத்திலும் உள்ளடக்

கத்திலும் பெருமளவுக்கு ஒன்று போலிருந்தன. மருமக னின் சாதனை கண்டு பெருமகிழ்வு கொண்டார் மாமா. மருமகனோ மனஎழுச்சி கொண்டார்.

குரு இன்னொரு தந்திரமும் செய்தார். இரண்டு படைப்புக்களையும் நகலெடுத்து இயற்றியவர்கள் பெயரை வெளிப்படுத்தாமல் தம் அண்ணனுக்கு அனுப்பி வைத்தார். கல்விமான் ஆகிய அண்ணன் அனு பவ மிக்க கவிஞரான தன் தம்பியின் படைப்பை எளி தாகக் கண்டு கொண்டார். பெயர் தெரியாத இன்னொரு கவிஞரின் அஷ்டகமும் கிட்டத் தட்ட இதே அளவு சிறப்பாக அமைந்திருப்பதாகப் பாராட்டினார். புதிய கவிஞர் யாரென்பதைக் கூறியவுடன் இந்த நகைச் சுவையை அனைவரும் ரசித்தனர். இராஜராஜவர்மா பல இனிய அன்பளிப்புகளைப் பெற்றார். இவை அனைத் தும் இவருக்குப் 15 வயது மட்டுமே ஆகும்போது நடை பெற்றன.

மற்றொரு மகிழ்ச்சிகரமான நிகழ்ச்சி ஏலத்தூர் இராமசாமி சாஸ்திரிகள் அரண்மனைக்கு வருகைபுரிந்த போது நடந்ததாகும். கேரளவர்மாவின் ஆசிரியரான சாஸ்திரிகள், தன் சீடரின் மாணவர்களுடைய திறமை யையும் ஆற்றலையும் சோதனை செய்ய விரும்பினார். அவர் 'குவலயானந்தம்' நூலிலிருந்து 'அத்யாபி திஷ்ததி' எனத் தொடங்கும் சுலோகத்தைப் பாடி மாணவர்களை அதன் பொருளை விளக்கும்படி கூறினார். அந்த மூத்த அறிஞர், இராஜராஜவர்மா சிலவரிகளை விளக்கிய விதத்திலும் அவற்றில் உள்ளடங்கிய நயங்களை வெளிப் படுத்திய திறத்திலும் மகிழ்வும் வியப்பும் எய்தினார். இளைஞரின் ஆற்றலைப் பாராட்டினார். இத்தகைய ஊக்குவிப்பு இயற்கையாகவே அந்த இளைய மாணவ ரின் அறிவுநலம் மலர உதவி செய்தது.

இவ்வாறாக இளமைப் பருவத்திலேயே இராஜ ராஜவர்மா சம்ஸ்கிருதத்தில் செய்யுள் புனையும் திறம்

பெற்றவராகச் சிறந்திருந்தார். அவர் சம்ஸ்கிருத இலக்க ணத்தையும் அணி இலக்கணத்தையும் கற்றுத் தேர்ந்து கவிதைகள் இயற்றத் தொடங்கினார். அந்தக் கவிதைகள் குடும்ப வட்டாரத்திலிருந்த கலைவல்லுனர்களை மட்டு மின்றி, அவரது அன்பான மாமாவின் அறிமுகத்துடன் திருவாங்கூர் மகாராஜாவையே சென்றடைந்தன.

1880 விசாகம் திருநாள், திருவாங்கூர் மன்னராக ஆனதிலிருந்து விதியின் சக்கரம் கேரளவர்மாவுக்குச் சாதகமாகத் திரும்பியது. இவ்வகையில் அனந்தபுரம் அரண்மனையைச் சேர்ந்தவர்கள் தங்கள் தகுதிக்குரிய ஊக்குவிப்பைப் பெற்றனர். மிக விரைவில் கேரளவர்மா தன் வீட்டைத் திருவனந்தபுரத்திற்கு மாற்றிக் கொண்டார். எழுத்தாளரும் கல்விமானுமாகிய விசாகம் திருநாள் மன்னருடன் நெருங்கிய துணையாக இருந்து வந்தார். விரைவிலேயே, அரும்பும் இளங்கவிஞரான இராஜராஜவர்மாவும் திருவனந்தபுரம் சென்று படிப் பைத் தொடர வேண்டும் என்றும் எண்ணம் எழுந்தது. இன்னும் இரண்டு மாணவர்களுடன் இராஜராஜவர்மா திருவனந்தபுரத்தில் சங்கணாசேரிமடம் என்னுமிடத்தில் தங்கி ஓர் உயர்நிலைப் பள்ளியில் தம் முறையான கல்வியைத் தொடர்ந்தார். தளராத ஊக்கத்துடன் வழி காட்டி வந்த கேரளவர்மா தான் இதனை ஏற்பாடு செய்தார் என்பதைச் சொல்ல வேண்டியதில்லை.

1881 முதல் உயர்நிலைப் பள்ளிப் படிப்புத் தொடர்ந்து நடந்தது. கல்வியில் பொதுவாக மிகச் சிறப் புடன் விளங்கினாலும் அவருக்கு பலவீனங்களும் இருந் தன. கணக்கு அவருக்கு அச்சமூட்டுவதாக விளங்கியது. கணக்கில் ஒற்றை எண்ணில் மதிப்பெண் பெற்ற போது கூட அவரது மொத்த சராசரி 70% ஆக இருந்தது. அதனால் அவர் அடுத்த வகுப்புக்குத் தேறியது ஐரோப் பிய முதல்வரின் பரிந்துரையால் நடந்த விதிவிலக்கா கவே இருந்தது. அவர் சம்ஸ்கிருதத்தை இரண்டாம்

மொழியாக எடுத்துக் கொண்டபோதும் மலையாளத்தை யும் படிக்க வேண்டியிருந்தது. இப்போதுதான் முதன் முதலாக மலையாள இலக்கணத்தைக் கற்கும் கவனம் அவருக்குள் துள்ளியெழுந்தது. சம்ஸ்கிருதத்தைப் பொறுத்தமட்டில் இவரது திறமை, சம்ஸ்கிருத ஆசிரிய ரான முன்சீயே தனக்குச் சமமாக இவரைக் கருதுமள வுக்கு இருந்தது. சிக்கலான கருத்துகள் வரும்போது இருவரும் ஒருவருக்கொருவர் ஆலோசனை கூறிக் கொண்டனர். மலையாளமொழி அந்நாட்களில் தாழ்வான, உரிய தகுதி பெறாத நிலையிலேயே வைக்கப் பட்டிருந்தது. சம்ஸ்கிருத ஆர்வலரான இராஜராஜவர்மா வும் அதனைச் சரியென்றே கருதினார். மலையாள மொழியிலுள்ள பாட நூல்கள் மிகவும் சுவையற்றதாயி ருந்தன. தாய்மொழியின் மீது இத்தகைய கருத்து பரவ இது காரணமாயிருந்தது.

அறிவும் திறம் பெற்ற அரசர் புதிய திறமைசாலி களை ஊக்குவிக்க விரும்பினார். குறிப்பான ஒரு முயற் சியில், அவர் சம்ஸ்கிருதத்தில் மகாராஜா தேர்ந்தெடுக்கும் ஒருதலைப்பில் எழுதப்பட்ட சிறந்த கட்டுரை ஒன்றுக்கு கவர்ச்சிகரமான ஒரு பரிசு அளிப்ப தாக அறிவித்தார். மாணவர்கள் இதற்கு எட்டுப்பக்க அளவில் ஒரு கட்டுரை எழுத வேண்டும். கட்டுரைகள் முதலில் மன்னரால் பார்க்கப்பட்டுப் பின்னர் கேரள வர்மாவுக்கு அனுப்பப்பட்டன. நம் இளங்கவிஞரும் ஒரு போட்டியாளராக இருந்தார். அரசர், கேரளவர்மா இரு வருமே சிறந்த கட்டுரை இராஜராஜ வர்மாவால் எழு தப்பட்ட கட்டுரைதான் என்னும் முடிவுக்கு வந்தனர். இந்த இளைய எழுத்தாளரின் மேல் உயர்பதவியில் உள்ளோரின் அக்கறை மிகுவதற்குக் காரணமான ஒரு நிகழ்ச்சியாக இது அமைந்தது. உயர்நிலைப் பள்ளிப் படிப்பு முன்னேற்றம் கண்டுவரும் வேளையில் கேரள வர்மா தன் மருமகனுக்கு சம்ஸ்கிருத உயர்நிலைப் பாடங்

களைக் கற்பிக்க நேரம் ஒதுக்கினார்.

**பல்கலைக் கழகக் கல்வி:**

விளையாட்டுத் துள்ளல் நிறைந்த இராஜராஜ வர்மா திருவனந்தபுரத்தில் தன் நண்பர்களுடன் வாழ்க்கையை மகிழ்வுடன் அனுபவித்து வந்தார். இருப் பினும் அவர் தன் மெட்ரிகுலேசன் தேர்வில் எந்தச் சிரமமுமின்றித் தேறினார். அவர் பல்கலைக்கழகப் படிப் பைத் தொடங்கவிருந்த வேளையில் ஒரு பெரிய துக்க நிகழ்ச்சி அதனைத் திடீரென நிறுத்தியது. 1884ல் அவரது அன்னையார் காலமானார். இது அவருக்குப் பலவிதங் களில் அதிர்ச்சியாக இருந்தது. தன் பாசமிக்க அன்னை யாரின் திடீர் மறைவு தந்த சோகம் மட்டுமின்றி, ஓராண்டுகாலம் அவர் வெளியிடங்களுக்குச் செல்லக் கூடாது என்ற மரபுக் கட்டுப் பாட்டின் காரணமாக அவர் தன் படிப்பை விட்டு விட நேர்ந்தது. ஓராண்டு காலம் முகசவரம் செய்யாமல் தன் வீட்டில் சில சடங் குகளைச் செய்ய வேண்டியிருந்தது. ஓராண்டு காலப் படிப்பை வீணாக்க விரும்பாத இளைஞர் நிலைமையை கேரளவர்மாவிடமும் மற்ற சிலரிடமும் எடுத்துரைத்தார். காலங்காலமாக வரும் சம்பிரதாயங்களை எதிர்த்துச் செல்லுமாறு அவருக்கு அறிவுரை கூறுமளவுக்கு எவருக் கும் துணிச்சலில்லை. இறுதியாக இந்தச் சிக்கல் அரச ரின் கவனத்துக்கு வந்தது. அவருடைய தீர்வு எல்லோராலும் நன்றியுடனும் நிம்மதியுடனும் ஏற்றுக் கொள்ளப்பட்டது அரசரின் மகன் ஸ்ரீநாராயணன் தம்பி சென்னைப் பல்கலைக் கழகத்தின் எஃப்.ஏ. தேர்வு எழுத வேண்டியிருந்தது. அவருக்காகத் தனி ஆசிரியர் மூலம் கற்றுக்கொடுக்க ஏற்பாடாகி இருந்தது. கொச்சப்பனுக் கும் அதே தனிப்பயிற்சி தரப்படவேண்டுமென அரசர் கட்டளையிட்டார். இது ஒரு வரவேற்கத்தக்க முடிவாக இருந்தது. நாட்டின் சிறந்த தனிப்பயிற்சியை சிரமமின்றிக் கொச்சப்பன் இலவசமாகவே பெற வாய்ப்பிருந்தது.

தனியாகத் தேர்வெழுத சென்னைப் பல்கலைக்கழகத்தி டம் சிறப்பு அனுமதி பெறவேண்டியிருந்தது. அரசரே விரும்பும்போது அதைப் பெறுவதிலும் எந்தச் சிக்கலும் இருந்திருக்காது. ஆனால் துரதிர்ஷ்டவசமாக விசாகம் திருநாள் விரைவில் காலமானார். அதனால் இராஜ ராஜவர்மா, மகாராஜா கல்லூரியில் பின்னர் சேர்ந்தார். 1885ல் எஃப்.ஏ. தேர்வில் வென்றார்.

பின்னர் அவர் பி.ஏ. வகுப்பில் சேர்ந்தார். முன்போலவே அவர் விளையாட்டில் ஆர்வமிக்கவராய் இருந்தார். அப்போது திருவனந்தபுரத்தில் பிரபலமாகி வந்த டென்னிஸ் விளையாட்டில் தனி அக்கறை எடுத் துக்கொண்டார். நீச்சலிலும் மகிழ்வுடன் ஈடுபட்டார். பாடநூல்களைப் படிப்பதைக் காட்டிலும் இலக்கியப் படைப்புக்களைப் படிப்பதிலும் கவிதைகள் இயற்றுவதி லும் அட்சர சுலோகம் என்னும் கவிதைப் போட்டிகளில் கலந்து கொள்வதிலும் ஆர்வத்துடன் ஈடுபட்டார். இவ்வாறாக ஒரு முழுமையான ஆளுமை வளர்ச்சி இருந்த போதிலும் பள்ளிப் பாடங்களில் போதுமான கவனம் செலுத்தவில்லை. பி.ஏ. தேர்வில் ஆங்கிலத்திலும் சம்ஸ்கிருதத்திலும் சிறப்புடன் தேறினார். ஆனால் விருப் பப்பாடமாகிய வேதியலில் (Chemistry) தோல்வியுற்றார். செய்முறைத் தேர்வில் தோல்வி நேர்ந்தது. அடுத்த தேர்வில் தனித் தேர்வராகத் தேர்வெழுதி வெற்றி பெற்றார். அந்த நாட்களில் இராஜராஜவர்மாவின் நாட் குறிப்புகள் அவர் தம் பாடங்களுக்குச் செலுத்திய கவ னம் குறித்து நிறைவடையவில்லை, எனத் தெளிவாக்குகின்றன. ஆனால் அவர் மனம் வைத்து ஒரு பாடத்தில் கவனம் செலுத்தினால் அதை எளிதாகக் கற்றுத் தேர்ந்து விடுவார். அதனால்தான் இளநிலை பி.ஏ. வகுப்பில் முதலிடம் பெற்றுப் பரிசையும் தட்டிச் சென்றார். சம்ஸ்கிருதத் தேர்வுகளில் விடைகளைக் கவி தைகளில் எழுதி திருத்துபவர்களை வியப்பிலாழ்த்துவ

தில் இவர் மகிழ்வடைந்தார். அவர் தனித்திறம்பெற்ற மாணவர் என இவை காட்டுகின்றன.

பி.ஏ. தேர்வில் பெற்ற தோல்வி இராஜராஜவர்மா வின் உள்ளத்தில் ஆழமான காயத்தை ஏற்படுத்தியது. சம்ஸ்கிருதத்தில் 28 சுலோகங்கள் தம் வருத்தத்தை வெளிப்படுத்தும் விதத்தில் இயற்றி அவர் சற்றே ஆறுதல் அடைந்தார். அந்தச் சிறிய இரங்கற்பா 'பங்கவிலாபம்' எனப் பெயரிடப்பட்டது. அவருடைய சொந்த நாட்குறிப்பு ஏடுகள் [4] கல்வியில் முழுக்கவனம் செலுத்த முடியாதது குறித்து ஏமாற்றத்தைக் காட்டுகின் றன. வேதியியல் செய்முறைத் தேர்வெழுத சென்னை சென்ற அவரது முதல் பயணம் குறித்து அவரது நாட்கு றிப்பில், அந்த தொல்லை நிறைந்த பயணத்தை வருணிக் கும் குறிப்புகள் உள்ளன. மத்திய திருவாங்கூரில் இருந்து சென்னை சென்றடைய அந்தச் சிறிய மாணவர் குழு வுக்கு ஒரு முழுவாரம் பிடித்தது. அந்த நாட்களில் புகைவண்டி சோரனூர் நிலையத்திலிருந்துதான் கிடைக் கும். அந்த ஊர்வரை பாதி நாட்டுப்படகிலும் பாதி மாட்டு வண்டியிலுமாகப் பயணம் நடைபெற்றது. இத னால் தூரந்தொலைவில் இருந்த மாணவர்கள் அங்கீரிக் கப்பட்ட பல்கலைக் கழகங்களில் உயர் கல்வி பெறுவதற்குப் பட்ட தொல்லைகளை நாம் கற்பனை செய்ய முடிகிறது.

**திருமணம்:**

சிறந்த தகுதிமிக்க இளைஞராக இராஜராஜவர்மா இருந்தபடியால் மன்னர் விசாகம் திருநாள் தன் மக ளுக்கு இவரை மணமகனாக்கும் கருத்திலிருந்தார். எதிர் பாராதபடி மன்னர் காலமாகியதால் விதி வேறுவிதமாக அமைந்தது. மூத்த கோயித்தம்புரான் தக்கநேரத்தில் முன்கூட்டிச்செயல்பட்டு அவருடைய மூன்றாவது மகள் 'ஸ்வாதித்திருநாள் மகாப்பிரபாதம்புராட்டிக்கும், இராஜ

[4] இன்று பயனுள்ள எதையும் செய்ய முடியவில்லை. என் சோம்பலைக கண்டு நான் வெட்கப்படுகிறேன். சோம்பேரிகள் எப்போதும் அறிவைப பெறமுடியாது.

ராஜவர்மாவுக்கும் திருமணம் மரபுப்படி 1889ல் நடை பெற்றது. அது மிகவும் மகிழ்ச்சிகரமான இணைப்பாக அமைந்தது. தம்புராட்டி தம் கணவரின்மேல் ஆழ்ந்த அன்பும் பெருமதிப்பும் கொண்டிருந்தார்

இராஜராஜவர்மாவுக்கு அப்போது வயது இருபத் தாறு. தக்க வளர்ச்சி பெற்ற மனிதராகவும் கல்விமானா கவும் வளரும் இளங்கவிஞராகவும் விளங்கினார். அவர் வேதியல் தேர்வில் தேறவேண்டியிருந்ததை அடுத்த முயற்சியில் சிரமமின்றித் தேர்ந்தார். இவ்வாறாக நம் திறம்பெற்ற இளந்தலைவர் மலையாளசத்திரிய இனத் தின் முதல் பட்டதாரி ஆனார். அறிஞர்களையும் கல்வி யாளர்களையும் படைத்திருந்த பெருமையிருந்தும் இந்த வர்க்கம் கல்வி நிறுவனங்கள் வழியே பெறும் முறைசா ர்ந்த கல்வியை விட்டு ஒதுங்கித்தனியே வீட்டில் தனிப்ப யிற்சி பெறுவதையே வழக்கமாகக் கொண்டிருந்தது. அதனால் இராஜராஜவர்மா சென்னைப் பல்கலைக் கழ கத்தின் பட்டதாரியாக ஆகியவுடன் அவர்களுடைய சமூ கத்தினரிடையே மனம்கலந்த மகிழ்வும் கொண்டாட்டமும் ஏற்பட்டன.[5] அவர் பல பரிசுகளை யும் அன்பளிப்புகளையும் பெற்றார். அவற்றில் மிக மதிப் புள்ளது மூலம்திருநாள் மகாராஜா அளித்த விலைமிகு கற்கள் பதித்த தங்க கைக் கடகம் ஆகும்.

## தொடக்க காலப் படைப்புகள்:

சம்ஸ்கிருதத்தில் கவிதைகள் இயற்ற சில முயற்சி களை நம் ஆசிரியர் செய்ததை முன்னரே குறிப்பிட் டோம். "விமானாஷ்டகம்" என்றும் படைப்பு இவர் சென்னையில் எம்.ஏ. தேர்வு எழுதி முடித்து திரும்பிய தும் இயற்றப்பட்டது. இது, சென்னையில் ஓர் ஐரோப்பி யர் காற்று நிறைந்த ஒரு விமானத்தில் பறக்க முயன்ற சோதனையை அடிப்படையாகக் கொண்டது. பார்வை யாளர்களின் உள்ளக்கிளர்ச்சி நன்கு வருணிக்கப்பட்டுள்

[5] அக்காலத்தில் தென்னிந்தியா முழுவதுமே ஓரே ஒரு பல்கலைக் கழகம் மட்டுமே இருந்தது.

ளது. பித்ருபிரலாபம் என்னும் படைப்பு ஒரு தந்தையின் புலம்பலைப் பாடுகிறது. இது, இராஜராஜவர்மாவின் இரண்டாவது மகளது அகால மரணம் குறித்து எழுதிய உருக்கமான இரங்கற்பா அகும். இந்தக் கால கட்டத்தில் பல சிறிய கவிதைகள் நண்பர்களுடைய தூண்டுதலாலும் வார மாத இதழ்களில் வெளியிடவும் எழுதப்பட்டன. தேவிமங்கலம், சரஸ்வதிஸ்தவம். ராகமுத்ர சப்தகம். பத்மநாப பஞ்சகம் மற்றும் தேவி தண்டகம் ஆகியன அவற்றில் சில. அதன் பின்னர் கைர்வாணி விஜயம் என்னும் ஓரங்க நாடகம் ஆங்கிலத்துடன் சம்ஸ்கிருதத்தை ஒப்பிட்டு சம்ஸ்கிருதத்தைப் பெருமைப்படுத்தும் விதத்தில் எழுதப்பட்டது. ஒத்தெல்லோ நாடகத்தை உரை நடையில் உத்தலசரிதம் காத்யம்[6] என்னும் தலைப்பில் எழுதினார். இந்தப் படைப்புகள் அனைத்தும் சம்ஸ்கிருதத்தில் இயற்றப்பட்டவை என்பது சிறப்பாகக் குறிப்பிடத்தக்கது. தாய்மொழியின்பால் இவ்வறிஞரின் கவனம் திரும்ப மேலும் சிலகாலம் ஆயிற்று. இவருடைய 1894ம் ஆண்டு நாட்குறிப்பு இவரது வாழ்க்கைக் குறிக்கோள் மலையாள மொழியைச் செழிக்கச் செய்வதென்பதை வெளிப்படுத்துகிறது.

கேரளவர்மாவின் தூண்டுதலின்பேரில் இவர் மலையாள இதழ்களான மலையாள மனோரமா, பிரம்ம வித்யா, விஞ்ஞான சிந்தாமணி, வித்யா வினோதினி, போன்றவற்றிற்குப் படைப்புக்களைத் தந்துவரலானார். இவர் சம்ஸ்கிருதம் மலையாளம் ஆகிய மொழிகளிலும் சில சமயம் ஆங்கில மொழியிலும் எழுதிவந்தார்.

[6]மேலும் விவரங்கட்குப் பகுதி ஆறைக் காண்க

## பகுதி மூன்று

# ஆசிரியர் மற்றும் ஆராய்ச்சியாளர்

இராஜராஜவர்மாவின் உயர்வர்க்கத் தொடர்புகள் அவரை வாழ்வின் வளமான நிலைகளில் வைக்க வில்லை. மாணவப் பருவத்தில் குடும்பத்தாரிடமிருந்து பெற்ற தொகை அவருடைய உரிய செலவுகளுக்கே போதுமானதாக இல்லை. இவருடைய பாசம் நிறைந்த மாமா கேரளவர்மா அடிக்கடி உதவி செய்து வந்தா ரென்பதில் ஐயமில்லை. அரசரும் தாராளமான உதவி யைச் செய்தார். ஆனால் இராஜராஜவர்மா தன் சொந்தக் காலில் நிற்க விரும்பினார். ஆகவே பட்டப்ப டிப்புக்குப் பிறகு மாநில அரசுப் பணியில் சேரவிரும்பி னார். அந்த நாட்களில் சத்திரிய இனத்தினர் அரசுப்பணியில் நுழைவது மரபுக்கு மாறாக இருந்தது. பழமை விரும்பும் பிற்போக்குவாதிகள், இராஜராஜ வர்மா அரசுப் பணியில் நுழைய விரும்புவதை அறிந்த தும் முகம் சுளித்தனர். இந்தப் பொருளற்ற தப்பெண்ணத்தைப் பற்றி ஏ.ஆர். அதிகம் அலட்டிக் கொள்ளவில்லை.

மாநில அரசு அந்த சமயத்தில் திருவனந்தபுரத்தில் ஒரு சம்ஸ்கிருதப் பாடசாலை தொடங்க முடிவுசெய்தது. இந்த நிறுவனத்தின் வளர்ச்சிக்கு வழிகாட்டும் தலை மைக்கு இராஜராஜவர்மா பொருத்தமான ஒருவரென் பது வெளிப்படை என்றாலும் அவருடைய குறைந்த வயது ஒரு தடையாகச் சுட்டிக்காட்டப்பட்டது. ஆனாலும் கடைசியில் 1890 ம் ஆண்டு அவர் பள்ளியின் முதல்வ ராகப் பணியில் அமர்த்தப்பட்டார். குறிப்பிட்ட பாடத் திட்டமோ, கால அட்டவணையோ, பாடப்பிரிவுகளோ

அப்போது உருவாகி இருக்க வில்லை. இராஜராஜவர்மா இவை அனைத்தையும் திட்டமிட்டு வகைப்படுத்தினார். சம்ஸ்கிருதப் பாடசாலையின் தகுதியை உயர்த்தினார். பிராமணர் அல்லாதாருக்குச் சம்ஸ்கிருதக் கல்வியை வழங்க இந்தப் பள்ளிதான் குறிப்பான பொறுப்பெடுத்துக்கொண்டது.

இந்தப் புதிய பணிக்காகத் திருவனந்தபுரத்தில் ஏ.ஆர் நிலையாக வசிக்க வேண்டி வந்தது. நாராயண சாஸ்திரிகள், கணபதி சாஸ்திரிகள் ஆகிய இரண்டு பெயர்பெற்ற கல்வியாளர்கள் ஆசிரியர்களாக இருந்து உதவினர். கேரளவர்மா கூறியதன்பேரில் இராஜராஜ வர்மா சம்ஸ்கிருத எம்.ஏ. தேர்வுக்குத் தனித் தேர்வராகப் பதிவு செய்திருந்தார். மேற்கூறிய பிற அலுவல்களின் காரணமாகத் தனிப்படிப்பு நிறைவான முறையில் முன்னேற்றம் காணவில்லை. அவரும் உல்லாசங்களை மறந்து கடும் உழைப்பில் நாட்களைக் கழிக்க விரும்ப வில்லை. சதுரங்கம், சீட்டு விளையாட்டு, குதிரை சவாரி மற்றும் பிற பொழுது போக்குகளை விடாது தொடர்ந்து வந்தார். எம்.ஏ. படிப்புக்காக ஓர் ஆராய்ச்சிக் கட்டுரை அவர் தயாரித்தளிக்க வேண்டியிருந்தது. அதற்காகத் தேர்ந்தெடுக்கப்பட்ட தலைப்பு "நாராயணப்பட்டா மற்றும் அவரது படைப்புகள்". அவருடைய இரண்டு உடன்பணிபுரிந்த திறனாளர்களும் ஓரளவுக்கு உதவிபு ரிந்தனர். அவர்கள் பழமை வழிப்பட்ட நல்ல கல்வியா ளர்களாக இருந்தாலும் ஆராய்ச்சி செய்வதற்கான திறமையோ பயிற்சியோ அவர்களிடமில்லை. அவர்கள் திறனாய்வு செய்யும் நுண்ணறிவும் நன்கு பெறவில்லை. எனவே, ஏ.ஆர் தானே பெருமளவு முயற்சிசெய்ய வேண்டிவந்தது. அவர் இந்தியன் ஆண்டிக்குவாரி முத லிய இதழ்களில் வெளிவந்த பயனுள்ள கருத்துக்களை ஆழ்ந்து தேடினார். இறுதியாக அவர் குறித்த நேரத்தில் முதல்தரமான ஓர் ஆராய்ச்சிக் கட்டுரையை உருவாக்கி

னார். அவர் 1891ல் பல்கலைக் கழகத்தேர்வில் கலந்து கொண்டு பல்கலைக்கழகத்தில் முதல் மாணவனாகத் தகுதி பெற்றுத் தேறினார். இருப்பினும் அவருக்கு இரண்டாம் வகுப்பே வழங்கப்பட்டது. அந்த நாட்களில் இவரைப்போன்ற அறிவுத்திறம் பெற்ற மாணவர்களுக்குக் கூட முதல் வகுப்புப் பெறுவது அரிதான, கடினமான செயலாக இருந்தது. இருந்தபோதிலும் தலைமைத் தேர்வாளர் சேஷகிரி சாஸ்திரி ஏ.ஆரின் விடைகளின் நயத்தில் மிகவும் கவரப்பட்டு அந்த விடைத்தாள்களைப் பத்திரப்படுத்தி வைக்குமாறு பல்கலைக்கழகத்துக்கு கருத்துக் கூறினார். ஒரு கேள்வியில் சம்ஸ்கிருதம் கிரேக்க மொழியிலிருந்து எடுத்துக் கொண்ட 12 சொற்களை எழுதுமாறு கூறியிருந்தது. இந்த மாணவர் 12 சொற்களுக்குப் பதிலாக 30 சொற்களை எழுதித் தேர்வாளரை வியப்பில் ஆழ்த்தினார். மில்டனின் கவிதைகளில் சில பகுதிகளை மொழி பெயர்க்குமாறு கூறியிருந்ததில், இவர் அவற்றை மிக இனிய கவிதைகளாகவே மொழி பெயர்த்திருந்தார். சம்ஸ்கிருதத்தில் இவர் காட்டிய திறமைக்காக இவர் 'ராஸ் தங்கப் பதக்கத்தையும், முனிசாமி செட்டி பதக்கத்தையும் வென்றார்'.

## சம்ஸ்கிருதக் கல்லூரி

1894ல் இராஜராஜவர்மா சம்ஸ்கிருதக் கல்லூரியின் முதல்வராகப் பணியில் அமர்த்தப்பட்டார். அங்கே இவர் தம் கவனம் முழுவதையும் கல்லூரியின் வளர்ச்சிக்கும் அதன் பாடத்திட்டத்தின் முன்னேற்றத்துக்கும் செலுத்தினார். அவர் அரசுக்குப் பல பரிந்துரைகளைத் தெரிவித்தார். அவற்றிற்சில நெடுங்காலத்திற்குப் பின்னரே ஒப்புதல் பெற்றன. அவர் பாடத்திட்டத்தில் இலக்கியம், ஆயுர்வேதம், சோதிடம் ஆகியன சேர்க்கப்பட வேண்டுமென விரும்பினார். கலைகள், அறிவியல் துறைகள், நம்நாட்டின் இலக்கியம் ஆகியவற்றுக்கும்

முதன்மை அளிக்கப்பட வேண்டுமென விரும்பினார். இவர் பாடத்திட்டத்தில் புவியியல், வரலாறு, அல்ஜிப்ரா, திரிகோணமிதி, ஆகியனவற்றைச் சேர்த்தார். அல்ஜிப்ரா திரிகோணமிதி வகுப்புக்களைத் தான் நடத்தியதுடன் அந்தப் பாடநூல்களைச் சம்ஸ்கிருதத்தில் மொழி பெயர்த்தார். அந்த நாட்களில் ஐரோப்பியப் பேராசிரி யர்கள் மற்றும் அவர்களது கருத்துக்கு உடன்பாடானவர் களுக்கு கல்வி பற்றிய முடிவுகளைத் தீர்மானிக்குக் குழுக்களில் மேல்நிலை இருந்து வந்தது. ஆனால் அவர் களும் இராஜராஜவர்மாவின் பரிந்துரைகளை படிப்படி யாக, ஏற்றுக்கொள்ள வேண்டிவந்தது என்பதை வரலாறு காட்டுகின்றது. இதற்காக 25 ஆண்டுகள் கடந்து செல்ல வேண்டியிருந்தது.

உலகத்தின் இரண்டு உயர்தனிச் செம்மொழிகளை ஆசிரியரது உள்ளம் எவ்வகையில் தொடர்புகொண்டது என்பதை கைர்வாணிவிஜயம் மற்றும் உத்தலசரிதம் ஆகிய இரண்டு நூல்களும் வெளிப்படுத்துகின்றன. இந்த இரண்டும் வளர்ச்சி குறைந்த நிலையிலிருந்த தாய்மொழி மலையாளம் செழித்து வளர்வதற்குத் தேவையான பல வற்றை வழங்கத்தக்க நிலையிலிருந்தன. இரண்டு சாஸ் திரிகளுக்கும் இவர் ஆங்கில மொழியில் தனிப்பயிற்சி அளித்தார். அவர்களில் ஒருவரான கணபதி சாஸ்திரி பேரிலக்கியங்களைப் பதிப்பிக்க வல்ல பதிப்பாசிரியர் ஆகச் சிறந்தார். ஏ.ஆர். அந்த நாட்களில் கல்வித் துறை யில் தம் நிலையை உயர்த்திக்கொள்ளவிரும்பினார் என்பதையும் அதிகார வர்க்கத்தினரிடமிருந்து பல சிறு சிறு தொந்தரவுகளைப் பெற்றார் என்பதையும் அவரது அந்நாளைய கடிதங்களும் நாட்குறிப்புச் செய்திகளும் வெளிப்படுத்துகின்றன. சென்னைப் பகுதியிலும் தகுதி யான பொறுப்புகளைப் பெற அவர் முயன்றார். மாநில மொழிகள் அந்த நாட்களில், தாழ்ந்த நிலையிலேயே வைக்கப்பட்டிருந்தன. 'மலையாளத்தில் படித்துத்தெரிந்

துகொள்ள என்ன இருக்கிறது? ' என்பது ஆங்கிலம் கற்ற உயர்நிலையினரால் அடிக்கடி கேட்கப்பட்ட கேள்வியா கும். சம்ஸ்கிருதத்தில் தனித்திறம் பெற்ற ஏ.ஆர். மலை யாளத்தில் எதிர்காலம் பற்றிய தொலைநோக்குக் கண்ணோட்டம் கொண்டவராக விளங்கினார். இந்தச் சிந்தனையில் அவருக்கு அவரது மாமா கேரளவர்மா உதவிபுரிந்தார். ஏ.ஆரின் அடுத்த வாழ்க்கை நிலை அவ ருக்கு இலக்கியம் என்பது மகிழ்வளிப்பதைக் காட்டிலும் மிகச் சிறப்பான வேறு பணியை ஆற்ற வேண்டியுள்ளது என்பதைப் புரிந்துகொள்ள ஓர் அரிய வாய்ப்பை நல்கி யது.

## வட்டார மொழிக் கல்விக் கண்காணிப்பாளர்:

1896-1898 ஆண்டுகளில் பள்ளி முதல்வரின் பணிகளை ஆயுர்வேதக் கல்லூரி முதல்வரின் பணிகளு டன் ஒருங்கிணைக்குமாறு முன்மொழிந்த கருத்துருவை அரசு ஒப்புக்கொள்ள மறுத்தது. பின்னர் தொல்பொருள் துறையின் இயக்குனர் பதவி காலியானபோது சம்ஸ்கிரு தக் கல்லூரியைத் தொல்பொருள் துறையுடன் இணைக் கும் திட்டத்துக்கும் அதே கதி நேர்ந்தது. இராஜராஜவர்மாவின் அறிவுத்திறமும் வல்லமையும் தென்னிந்தியா முழுவதும் அப்போது நன்கு அங்கீகரிக் கப்பட்டிருந்தன. ஆனாலும் அதிகாரத்திலிருக்கும் திவா னின் அன்பைப் பெறுவதே முதன்மையாயிருந்தது. அவரது திறமை கிருஷ்ணசாமி ராவ் திவானாக ஆகிய தும் அங்கீகரிக்கப்பட்டது. மகாராஜா கல்லூரியில் வட்டார மொழிகளின் கண்காணிப்பாளராக இராஜரா ஜவர்மா பணியமர்த்தப்பட்டார். 1899ல் ஏ.ஆர்.சம்ஸ்கி ருதக் கல்லூரியின் பொறுப்பைக் கணபதி சாஸ்திரிகளிடம் ஒப்படைத்துவிட்டுப் புதிய பதவியை ஏற்றார்.

புதிய பதவி பல புதுமையான வாய்ப்புக்களை நம்

அறிஞருக்கு ஏற்படுத்தித் தந்தது. உயர்கல்வியில் இந்திய மொழிகளின் நிலை கொஞ்சம்கூட நிறைவளிக்கவில்லை என அவர் உணர்ந்தார். பாடத்திட்டம் தவறாகத் திட்ட மிடப்பட்டிருந்தது. பாடநூல்கள் தகுதியாக இல்லை. மொழி கற்பிக்கும் வகுப்புக்களுக்கு மாணவர்கள் அக்க றையில்லாமல் வந்தனர். இங்கேதான் இராஜராஜவர்மா ஆற்றிய பங்கு உண்மையிலேயே மிக முதன்மையானதா கவும் நினைந்து போற்றத்தக்கதாகவும் அமைந்தது. இருப் பிலிருந்த சிறந்த நூல்கள் படிப்பதற்கு வைக்கப்பட்டன. புதிய நூல்கள் வல்லுனர்களால் எழுதப்பட ஏற்பாடுகள் செய்யப்பட்டன. பாடத்திட்டத்தில் சீர்திருத்தம் செய்யப் பட்டது. இவரே எஃப். ஏ (கலையியலில் முதல் தேர்வு) மற்றும் பி.ஏ. வகுப்பு மாணவர்களுக்கும் பல பாடவே ளைகளில் வகுப்பெடுத்தார். இலக்கணம், யாப்பியல், அணியியல் பற்றிய புதிய நூல்களை தேவைக்கேற்ப எழுதினார். தம் செல்லமான மாணவர்களாயிருந்து ஆசி ரியராகிய சாகித்ய பஞ்சானன் பி.கே. நாராயணபிள்ளை உட்படத் தன்னுடன் பணியாற்றிய பல ஆசிரியர்களுக்கும் பாடம் பயிற்றுவதில் வழிகாட்டியாயிருந்தார். ஏ.ஆர். எழுதிய சிறந்த நூல்கள் பற்றிப் பின்னர் ஆராய்வோம்

## இந்திய மொழிகளின் காவல் தளபதி:

அந்த நாட்களில் தாய்மொழிக்கல்வி, இரண்டாம் மொழி என்னும் பெயரில் பின்னிலைக்குத் ஒதுக்கித் தள்ளப்பட்டிருந்தது. முதல் மொழியும் மிக முதன்மை யான பாடப் பகுதியும் ஆங்கிலம்தான். இந்த மொழி யைக் கற்க மாணவர்கள் சிறப்புக் கவனம் செலுத்தினர். அவர்களுடைய சொந்த மொழியைக் கற்க வேண்டிவந் தபோதோ மாணவர்களின் இயல்பான நிலையே அலட் சியப் போக்காக அமைந்தது. அது பல காரணங்களின் மொத்த விளைவு ஆகும் இவற்றில் சில முன்பே சுட்டிக் காட்டப்பட்டுள்ளன. பல்கலைக்கழகப் படிப்பிலிருந்து இரண்டாம் மொழியை நீக்கி விடவும் கூட ஓர் இயக்கம்

தோன்றிக் குறுகிய காலத்திற்கு வெற்றியும் கண்டது. ஆனால் விரைவில் நிலைமை மாற்றம்கண்டது. இராஜ ராஜவர்மாவின் காலத்தில்தான் மலையாளம் பல்கலைக் கழக அளவில் கற்கப்பட வேண்டிய மதிப்பான பாடமாகக் கருதப்பட்டது. இந்த அறிஞரின் கூர்த்த பேர றிவு, வியக்கத்தக்க தொலைநோக்கு இடையறா உழைப்பு அகிய மூன்றுமே இது பற்றிய திருப்புமுனை உருவாகக் காரணமாய் அமைந்தன. செய்தித் தாள்கள், மேடை, பல்கலைக் கழகத்தின் கல்விக்குழுக்கள் அனைத் திலும் இந்திய மொழிகளுக்கு உரிய அங்கீகாரம் பெற இவர் போராடினார். விடுதலைக்குப் பிறகு நம் இந்திய மொழிகள் புதிய சூழலில் இடம் பெற்றன. ஆதலால் அந்த நாளில் இருந்த நிலையைப் புரிந்துகொள்ள மிக வும் கவனமும் கற்பனையும் தேவைப்படும். தொலை நோக்குள்ளவராகவும் சிறந்த திட்டமிடுபவராகவும் மட்டுமன்றி ஆசிரியர் என்ற முறையிலும் இராஜராஜ வர்மா சிறந்துவிளங்கினார். பி. அனந்தன்பிள்ளை, பி.கே. நாராயணபிள்ளை போன்ற அவருடைய மாண வர்கள் அவரது ஆசிரியப் பணியின் திறத்தை வியந்து எழுதியிருக்கிறார்கள். அறிவுத்திறம் பெற்ற மாணவர்கள் அவரது வகுப்பில் அவருடைய போதனையில் ஆழ்ந்து கிடந்தார்கள். சுமாரான அறிவு படைத்த மாணவர்களுக் கும் அவரது வகுப்புகள் சுவையாகவே இருந்தன. அந்த நாட்களிலும் மொழிக்கல்வி வகுப்புகளில் மாணவர்கள் உறங்குவதும் பொழுதை வறிதே கழிப்பதும் வழக்கம் தான். புகழ்பெற்ற ஒரு பழைய மாணவர், தம்பிரானின் வகுப்பில் பயின்ற அனுபவத்தை இவ்வாறு எழுதியுள் ளார்.

'பி.ஏ. வகுப்பில் சேரத் திருவனந்தபுரம் சென்றேன். வழக்கம் போல மலையாள வகுப்புகளில் தூங்கலாம் அல்லது சொந்தக் கடிதங்களை எழுதிக் கொண்டிருக்க லாம் என நினைத்தேன். அதன் பின்னர் வகுப்பு மேடை

யில ஒரு பெருமைக்குரிய மனிதர் தோன்றி என்னை வியப்படையச் செய்தார். அவருடைய சொற்கள் கருத் தாழமும் கவர்ச்சியும் கூடியதாய் அமைந்து என்னை மந்திரவசியம் போல் மயக்கின. பிறகுதான் நான் அந்த ஆசிரியர் புகழ்மிக்க கேரளபாணினி பேராசிரியர் தம்பு ரான் என அறிந்தேன். அடுத்த இரண்டாண்டுகளுக்கு நான் வகுப்பில் என் பழக்கங்களை மாற்றிக்கொண் டேன். அவருடைய வகுப்பில் நான் சிலிர்ப்பையும் மனக் கிளர்ச்சியையும் அனுபவித்தேன்.'

தம்புரானின் கடமைப் பொறுப்புணர்ச்சி அனைவ ரும் அறிந்தது. கற்பித்தலும் கற்பித்தலைக் கண்காணித்த லும் அவரது முதன்மையான பொறுப்புகளாக அமைந்தன. அவர் மாணவர்களைப் பல கல்விசார்ந்த பிற ஆக்கபூர்வமான பணிகளில் ஈடுபடுமாறும் மலை யாள சமாஜம் போன்றவற்றை அமைக்குமாறும் ஊக்கப் படுத்தினார். கல்லூரி மாணவர்களும் புகழ்பெற்ற அறிஞர்களும் சொற்பொழிவுகள் நிகழ்த்தினர். கலந்து ரையாடல்களில் பங்குகொண்டனர். கருத்தரங்கம், ஆய்வ ரங்கம் முதலிய சொற்கள் புழக்கத்துக்கு அப்போது வந்திருக்காவிட்டாலும் அவற்றின் இயல்புகள் அன்றிருந் தன.

தம்புரான் இத்தகைய கூட்டங்களில் தவறாமல் கலந்துகொண்டு இறுதிவரை அமர்ந்திருந்தார். இது மா ணவர்களுக்கு மிகவும் ஊக்கம் தருவதாயிருந்தது. அரும்பி வரும் எழுத்தாளர்கள் சிலர் அவர்களில் இருந் தார்கள்.

நன்கு கற்பித்தலும் நன்கு கற்றலும் ஒன்றுடன் ஒன்று இயைந்து நடைபெறுவது இயற்கைதான். இராஜ ராஜவர்மா மலையாள மொழியின் மேன்மை மிக்க ஆசிரியர்களில் ஒருவர் என்பது போலவே பலநூற்றாண் டுகளில் அம்மொழிக்குக் கிடைத்த தலைசிறந்த மாணவர் களிலும் ஒருவர் ஆவார். தொடக்க காலத்தில்

சம்ஸ்கிருதத்துடன் ஒன்றியிருந்து மலையாளத்தைப் புறக் கணித்தவராக இருந்த இவர் சூழ்நிலைகளின் காரணமா கத்தமது இறுதி 25 ஆண்டு கால வாழ்க்கையில் மிகமிகப் பெருமளவுக்கு மலையாள மொழியிலேயே எழுதினார். ஆனால் அவரது அறிவாற்றலுக்கும் மன எழுச்சிக்கும் ஊற்றுக்களாக அமைந்தவை சம்ஸ்கிருதமும் ஆங்கில முமே. ஒவ்வொரு நாளும் அவர் படித்த நூல்கள் மகா பாரதமும் பகவத் கீதையும் ஆகும். சோதிடத்தில் அவரது ஆராய்ச்சியை அவர் தொடர்ந்துவந்தார். கவிதையியல் மற்றும் இலக்கியஆராய்ச்சிக் கூறுகள் போன்றவற்றைப் பற்றி அவர் சம்ஸ்கிருதம் மற்றும் ஆங்கிலப் படைப்புக்க ளைப் பயன்படுத்திக்கொண்டார். மலையாள இலக்கி யத்தை வளப்படுத்தக் கருதும் எவருக்கும் பரந்த ஆங்கில இலக்கியப் படிப்பறிவு இருத்தல் மிகவும் பயன்தரத்தக் கது என அவர் நம்பினார். சேக்ஸ்பியரின் நாடகங்கள் ,பிராய்டின் கட்டுரைகள், மெக்காலேயின் இங்கிலாந்து வரலாறு, தாக்கரே, ஸ்காட் ஆகியோரின் நாவல்கள், சோபன்ஹாவரின் விஸ்டம் ஆஃப் லைஃப் ஆகியன அவரது நாட்குறிப்புக்களில் வியந்து பாராட்டப்பட்டிருந் தன.

வாய்ப்புக் கிடைக்கும் போதெல்லாம் மற்ற அறி ஞர்களுடன் சுவையான இலக்கியம் மற்றும் மொழியியல் விவகாரங்கள் குறித்துக் கலந்துரையாடுவது அவர் வழக் கம். அரும்பெரும் நூலாகிய கேரள பாணினீயத்தில் அவர் ஈடுபட்டிருக்கையில் வினைச்சொற்களின் வேர்ச்சொற்பட்டியலைப் பெருங்கவிஞர் குஞ்சிக்குட்டன் தம்பிரானிடம் காட்டி அவரது கருத்துக்களைத் தெரிந்து கொண்டார். அவரது கவிதைப் படைப்புகள் வழக்கமாகத் துரவூர் நாராயண சாஸ்திரிகளால் மேற்பார்க்கப்பட்டன. இவை அனைத்தும் இவரது அடக் கத்தையும் தம் மொழிக்குத் தலைசிறந்த படைப்புக்க ளையே உருவாக்கி அளிக்க வேண்டுமென்னும் அவரது

ஆவலையும் காட்டுகின்றன. உணர்வின் உயிரோட்டம் வறண்டுபோன வறட்டுக்கல்வியாளர் அல்ல அவர் என்பதை அவரது எல்லா எழுத்தோவியங்களும் காட்டு கின்றன. நாடகங்களை உருவாக்குவதிலும் அவற்றில் நடிப்பதிலும் அவர் மகிழ்வடைந்தார். கடுமைமிக்க ஆராய்ச்சிப் பணிகளிலிருந்து நிம்மதிக்கு ஒரு வாய்ப்பா கவும் அவரது நெருங்கிய நண்பர்கள் மற்றும் உடனிருந் தவர்களுக்குப் பொழுது போக்காகவும் அமையும் விதத்தில் அவர் சில சம்ஸ்கிருத நாடகங்களை மலை யாள மொழியாக்கம் செய்தார்.

## பகுதி நான்கு
## கல்விப் பணியின் சிகரம்

28 ஆண்டுகள் தொடர்ந்த இராஜராஜவர்மாவின் கல்விப் பணியானது, 'வாழ்க்கை ஏணியின் மிக எளிய ஆரம்பப் படிகளில் தொடங்கி இருபதாண்டுகளில் உச்ச கட்ட மேன்மையை எட்டியது. பேராசிரியராகும் நிலைக ளெல்லாம் ஐரோப்பியர்களின் தனி உரிமையாகக் கருதப்பட்ட காலத்திலே, அதுவும் புறக்கணிக்கப்பட்டு வந்த இந்திய மொழிப் புலத்திலே ஒரு முதல் நிலைக் கல்லூரியில் பேராசிரியராக ஆனது ஓர் அரிய சாதனை ஆகும். இந்த மரபை வென்ற பெருமை இராஜராஜவர் மாவுக்கு இயற்கையாகவே வந்தடைந்தது. அவர் 1910ல் சம்ஸ்கிருதம் மற்றும் திராவிட மொழிகளின் முதற் பேரா சிரியராகப் பணியில் அமர்த்தப்பட்டார். இந்தச் செய்தியை அறிந்து பெருமகிழ்வடைந்த கேரளவர்மா தம்மருமகனுக்கு ஒரு வாழ்த்துத் தந்தி அனுப்பினார். தந்தியைப் பெற்ற வர்மா மிகவும் உயர்வாக அதனைப் போற்றினார். பற்பல வாழ்த்துச் செய்திகள் குவிந்தன என்பதிலும் குடும்பம் முழுவதுமே மகிழ்ச்சித்துள்ளலில் இருந்தது என்பதிலும் ஐயமில்லை.

1910 முதல் 1915 வரை அவர் பேராசிரியராக இருந்த ஐந்தாண்டுக்காலத்தில் சூழ்நிலைகளெல்லாமே இனிதாக இருந்தது என்று கூறுவதற்கில்லை. கல்லூரிக் குழுக் கூட்டங்களில் தம்புரானின் கருத்துக்களுடன் ஐரோப்பிய பேராசிரியர்களின் கருத்துக்கள் ஒத்துப் போகவில்லை. தொடக்கத்தில் இவர் சம்ஸ்கிருதத்திற்கு

ஒன்றும் மலையாளத்திற்கு ஒன்றுமாக இரண்டு ஆசிரியர் களை (டியூட்டர்கள்) நியமிக்க விரும்பினார். எதிர்ப்பு வந்த போதிலும் இறுதியில் இவர் வென்றார். இந்த வகையில்தான் பெயர் பெற்ற அறிஞர்களான நந்த்யர் வீட்டில் பரமேஸ்வரன் பிள்ளை மற்றும் ஆத்தூர் கிருஷ்ணபிஷரோடி ஆகியோர் திருவனந்தபுரம் மகா ராஜா கல்லூரியில் நியமனம் பெற்றனர். இத்தகைய நல்லறிஞர்களும் கடமைப் பொறுப்புணர்வு மிக்க ஆசிரி யர்களும் பல நல்ல மாணவர்களை ஈர்த்ததனால் அவர் கள் மலையாள மொழியில் தனித்திறம் பெறத் தொடங்கினர். இது அந்தத் துறையின் பொதுவான தரத்தையேமேலுயர்த்தியது.

ஐரோப்பியப் பேராசிரியர்களுக்கும் இந்தியப் பேராசிரியர்களுக்கும் இடையே ஊதிய நிலையில் வேறு பாடிருந்தது. ஐரோப்பியப் பேராசிரியர் மாத ஊதியம் ரூ. 750/- பெற்ற வேளையில் இந்தியப் பேராசிரியர் ரூ. 450/-மட்டுமே பெற்றார். மூன்றாண்டுகள் பல விண்ணப் பங்கள் கொடுத்தும் வாதாடியும் இந்த வேறுபாடு நீக்கப் பட்டது. அந்த நாட்களில் ஐரோப்பியர்கள் மட்டுமே கல்லூரி முதல்வர்களாக நியமிக்கப்பட்டனர். 1913ல் இராஜராஜவர்மா தற்காலிக முதல்வராக எட்டு நாட்க ளுக்கு நியமிக்கப்பட்ட போது அது பெரும் சிறப்பு வாய்ந்த ஒரு நிகழ்ச்சியாகக் கருதப்பட்டது. 1916ல் ஏழு மாதங்களும் 1918ல் மூன்று மாதங்களும் தற்காலிக முதல்வராகப் பணியாற்ற இராஜராஜவர்மாவுக்கு இரண்டு வாய்ப்புக்கள் கிடைத்தன.

### சீர்திருத்த ஆர்வம்:

சென்னைப் பல்கலைக்கழகம் இந்திய மொழிகளை நடத்திய விதம் குறித்து இராஜராஜவர்மாவுக்கு மனமகிழ் வில்லை. இந்த மனப்போக்கை வாய்ப்புக்கிடைத்த போதெல்லாம் இவர் கண்டிக்கத் தவறவில்லை. 1914ல்

இராஜராஜவர்மா கல்லூரி நாள் விழாவுக்குத் தலைமை தாங்கினார். மிகக் கவனத்துடன் ஆங்கிலத்தில் தயாரிக்கப்பட்ட அவரது தலைமை உரை அச்சடிக்கப்பட்டுப் பல்கலைக்கழகத்தின் பேரவை, ஆட்சிக்குழு மற்றும் கல்விக் குழு உறுப்பினர்களுக்கு அனுப்பப்பட்டது. இரண்டாம் மொழியைக்கட்டாயமாகக் கற்பதை நீக்கும் முயற்சிபற்றியும் பிற தொடர்பான கருத்துக்களையும் அவரது சொற்பொழிவின் கீழ்வரும் பகுதிகளிலிருந்து காணலாம்.

'...சில தென்னிந்திய மொழிகளில் அந்தக் கால கட்டத்தில் படிப்பதற்கேற்ற மற்றும் தேர்வுகளின் உயர் தரத்துக்கு உகந்த நூல்கள் குறிப்பாக உரைநடை நூல்கள் கிடைக்கவில்லை. அவ்வாறு கிடைத்த சில நூல்களும் ஆங்கில இலக்கியத்தின் பெருங்காவியங்களுடன் எவ்வி தத்திலும் ஒப்புநோக்கத் தக்கவையாக இல்லை. கல்விக் குழுக்கள் கிடைத்த நூல்களில் உயர்ந்தனவற்றைத் தேர்வுகளுக்குப் பாடநூல்களாக அமைக்காததால் நிலைமை மேலும் சீர்கேடடைந்தது. மேலும் மொழிப் புலவர்கள் (பண்டிட்டுகள்) இந்த நூல்களை நவீனத் திறனாய்வு முறையில் கற்பிக்கவும் வல்லமை பெற்றிருக் கவில்லை. இந்தச் சூழ்நிலை இயற்கையாகவே மாணவர் கள் மனத்தில் இந்த மொழிப்பாடம் குறித்த வெறுப்புணர்வை உருவாக்கியது. பல்கலைக்கழகத் தேர்வாளர்களும் அற்பமான குழப்பமூட்டுகிற கேள்வித் தாட்களை அமைத்து இந்தப் பாடத்தை வெறுக்கச் செய்தனர்.'

இது அந்த நாட்களில் நிலவிவந்த சூழ்நிலைபற்றிய சரியான, விருப்பு வெறுப்பற்ற ஆய்வு ஆகும். அம்முறை யின் தோல்வியையும் இது ஒப்புக்கொண்டது. சொந்தப் பண்பாட்டின் ஆதரவாளர்கள் இச்சிக்கலைப் பற்றி மறு ஆய்வு செய்யவேண்டுமெனப் போராடினர். அதைப் பற்றி இராஜராஜவர்மா தொடர்ந்து சொல்கிறார்.

"அவர்கள் இரண்டாம் மொழிப் படிப்பு குறித்து நிலையைச் சீர் செய்யவேண்டுமே தவிர அந்தப் படிப் பையே நீக்கிவிடக்கூடாதென்றனர்.... அந்தத் தோல்வி மொழிகளிடையே உள்ள குறைகளால் ஏற்பட்டதல்ல; அவைகளைச் சரியானபடி பயன்படுத்தி நிலைமையை ஆராயாமல் விட்டதால்தான். பலகல்லூரிகளில் இரண் டாம் மொழிகளின் திறமான கற்பித்தலுக்குப் போது மான வழிவகைகள் செய்யப்பட்டிருக்கவில்லை. அந்தப்பாடம் பொதுவாக அரைப்பட்டினியில் வாடித் தம் சேவையை மிகக்குறைந்த சம்பளத்துக்காகத் தந்து வந்த பழைய மரபுப் பண்டிதர்களிடமே ஒப்படைக்கப் பட்டது. இதன்காரணமாக இந்தப் பாடம் மாணவர்களின் கண்ணோட்டத்தில் மதிப்பை இழந்தது.

இப்படியாகத்தான் இந்தப் பெருங்கேடு உருவாகி யது. இதற்குச் சரியான தீர்வு, இந்த முறையின் குறை களை நீக்குவதுதானே தவிரப் பாடத்தையே அறவே ஒழித்துவிடுவதல்ல."

பின்னர் அவர் தன் தாய்மொழியாகிய மலையா ளம் அடைந்த முன்னேற்றத்தைப் பற்றிய மதிப்பீட்டை உரைக்கிறார். "மலையாளத்திலும் மற்ற மாநில மொழி களிலும் மிக அண்மைக் காலத்தில் எழுந்துள்ள திரளான உரைநடை இலக்கியத்தைக் கவனியுங்கள். சந்தேகமில்லா மல் இது பல்கலைக்கழகத்தின் நேரடியான மற்றும் மறை முகமான பணியின் காரணமாகத்தான் எழுந்தது. இலக்கியத் திறனாய்வு, பொதுநிலை அறிவியல் மற்றும் நவீனச் சிந்தனை ஆர்வத்தில் எழுந்த பிற பாடங்கள் ஆகியவை எல்லாம் மாநில மொழிகளில் எழுந்துள்ள தைக் கூர்ந்து நோக்குங்கள். ஆங்கிலத்திலும் மாநில மொழிகளிலும் தொகுப்பான பயிற்சியும் அறிவார்ந்த போதனையும் பெற்ற பல்கலைக் கழகப் பட்டதாரிகளின் முயற்சியில்லா விட்டால் இவற்றைக் கேள்விப்படக்கூட முடியாது போயிருக்கும் 'டைட்டில்' பட்டத்தேர்வுகளின்

(கீழ்த்திசைப் பட்டயத் தேர்வுகள்) பாடத்திட்டம் பண்டி தர்களை நவீனப்படுத்தவும் அவர்களின் மூடத்தனமான பிடிவாதத்தைத் தகர்க்கவும் தீங்கு விளைக்கும் சக்தியில் லாதவர்களாக அவர்களை ஆக்கவும் ஏற்றவிதத்தில் அமைந்துள்ளது.

'பல்கலைக்கழகத்தின் புதிய பாடத்திட்டத்தில் கூட ஆங்கில மொழியிலிருந்து மாநில மொழிக்கும் மாநில மொழியிலிருந்து ஆங்கிலத்துக்கும் 'மொழி பெயர்ப்பு' செய்வதை எல்லாப் பிரிவுகளுக்கும் ஒரு கட்டாயப் பா டமாக ஏன் ஆக்கிடவில்லை என நான் வியப்படைகி றேன்'. அவர் பிறகு, ஒன்றுக்கொன்று தொடர்பற்ற, சமரச உணர்வற்ற இரண்டு தனித்தனி மக்கள் குழுக்க ளைப் போற்றி வளர்ப்பதன் ஆபத்துக்களைச் சுட்டிக் காட்டுகிறார்.

பெரும்பான்மையினர் ஆங்கிலத் தொடர்போ பொது அறிவோ இல்லாதிருக்கிறார்கள். சிறுபான்மையி னர் மேலைநாட்டுப்பாணிக்கல்வி கற்ற பெருமிதத்தோடு ஆனால் தேசிய உணர்வின்றி காலகாலமாகத் தம்மைப் பிணைத்துள்ள பண்பாட்டிலிருந்து விலகித் திசைதெரி யாத பயணத்தில் உள்ளனர்.

## இறுதியாக அவர் மேலும் கூறுகிறார்:

'மாநில மொழி மட்டுமே எக்காலத்திலும் பொது மக்களின் மொழியாக நிலவிவரும். எனவே இந்தியாவில் ஆங்கிலக்கல்வி உருவாக்கி வரும் நாகரீக முன்னேற்றத் திற்கு இயைபான வகையில் மாநில மொழியிலும் ஆக்கப் பணிகள் நடைபெற வேண்டும். ஆகவே ஆங்கிலக்கல்வி பெற்ற சராசரி இந்தியன் மேலைநாட்டு நவீன அறிவி லும் பண்பாட் டிலும் அடைந்துள்ள உயர்வில் ஒரு பகுதி யாவது அமைந்திருக்க வேண்டிய அளவுக்கு மாநில மொழியும் முன்னேறுமாறு செய்யவேண்டும். நம் பல்கலைக்கழகங்களின் பட்டதாரிகளைக் காட்டிலும்

சிறப்பாக இந்த இன்றியமையாத பணியை யார் செய்யக் கூடும்? பாடக்கருத்துக்களிலும் மொழியமைப்பிலும் பொருத்தமான பயிற்சி பெறாவிட்டால் அவர்கள் இதனை எவ்வாறு செய்ய முடியும்?'

'அவருடைய தலைமை உரை கல்வியின் இதர அம்சங்களைப் பற்றியும் வளமான வளமையான இந்தி யப் பண்பாட்டை உருவாக்குவதில் சம்ஸ்கிருதம் ஆற்றிய பங்கைப் பற்றியும் குறிப்பிட்டது. தென்னிந்தியா முழுவ திலுமிருந்து மிகப்பல கல்வியாளர்கள் இராஜராஜவர்மா வை அவரது சொற்பொழிவின் ஆற்றல், தெளிவு, தொலைநோககு ஆகியவற்றுக்காகவும் இந்திய மொழிக ளின் மேன்மைக்காக வாதாடிய முறையின் சிறப்புக்கா கவும் பாராட்டினர். இந்திய மொழிகளில் பி.ஏ. ஆனர்சு படிப்பைத் தொடங்குவதையும் அவர் ஆதரித்தார். பிறி தொரு நிலையில் அவர் சென்னைப் பல்கலைக்கழகத் தின் குறைகளைத் தவிர்க்கவும் மாநிலத்தின் தனித்தன்மை வாய்ந்த தேவைகளையும் இலட்சியங்களை யும் போற்றி வளர்க்கவும் திருவாங்கூரில் ஒரு தனிப் பல்கலைக் கழகம் அமைக்க வேண்டுமெனக் கருத்துக் கூறினார். அறுபதாண்டுகளுக்கு முன்பு அது ஓர் உணர்ச்சி வேகக் கனவு போலத் தோன்றியிருக் கலாம்.ஆனால் பிற்கால நிகழ்ச்சிகள் அவர் எவ்வளவு சரியான கருத்திலிருந்தார் என நிருபித்தன. **1935**ம் ஆண்டில் திருவனந்தபுரம் மகாராஜா கல்லூரியில் மலை யாள மொழிப் பாடத்தில் பி.ஏ. (ஆனர்சு). படிப்புத்தொ டங்கப்பட்டது. **1937**ல் திருவாங்கூர் பல்கலைக்கழகம் உருவாக்கப்பட்டுப் பின்னாளில் கேரளப் பல்கலைக்கழ கமாக மாறியது.

## அறிவுத்திறப் பணிகள்:

தம்முடைய, சம்ஸ்கிருதம் மற்றும் திராவிட மொழி கள் துறையின் பேராசிரியர் மற்றும் துறைத்தலைவர் பொறுப்புக்கான பொதுவான பணிகளைத் தவிர

இராஜராஜவர்மா பொதுக்கல்வி மற்றும் மொழிப்பா டங்கள் தொடர்பான பல்வேறு பொறுப்புக்களை ஏற்றுக்கொள்ள வேண்டி வந்தது. பல்கலைக்கழகத்தின் பாடத்திட்ட வாரியத்திலும் திருவாங்கூர் மாநில பா டநூல் குழுவிலும் செயல்வேகமிக்க பயன்மிக்க உறுப்பி னராகச் செயல்பட்டுப் பெருந்தொண்டாற்றினார். அதிகாரிகள் மற்றும் அதிகாரப் பற்றற்றவர்கள் பங்கேற்ற மொழி முன்னேற்றக் குழு (பாஷாபரிஷ்கர ணக் குழு) விலும் உறுப்பினராக இருந்தார். இதைத்த விர, மிகச் சிறந்த அறிஞர்களின் சொற்பொழிவுகளை ஏற்பாடு செய்த பொது மக்கள் சொற்பொழிவுக் குழு வின் செயலாளராகவும் இருந்தார். மிகப் பல குழுக்க ளில் அவர் தலைவராக இயங்கிக் கருத்துப் பரிமாற்றங்களை வழிநடத்தினார்.

இத்தகைய பணிகள் இருந்தபோதும் அவர் நூல்களை எழுத நேரம் ஒதுக்கிக்கொண்டார். அது பெரு மளவிலான படைப்பாக்கத் திறன்மிக்க காலம். இறுதி எட்டாண்டுகள் பணிக்காலத்தில் பணிச்சுமை மிகுதியாக அழுத்திய கால கட்டத்தில் அவர் சாகித்ய சாஉற்யம். மலையாள சாகுந்தலம். (சாகுந்தல நாடகத்தின் எளிய மலையாள வடிவம்) (லகுபாணினீயம் பகுதி இரண்டு. ஆகியவற்றையும் மாளவிகாக்னிமித்ரம், சாருதத்தம், ஸ்வப்னவாசவதத்தம் ஆகிய நாடகங்களின் மொழி பெயர்ப்பையும் இயற்றினார். இத்துடன் பள்ளிகளுக் கான மொழிப்பாட நூல்கள் எழுதினார். அவரது மகத் தான படைப்பான கேரளபாணினீயம் (மலையாள இலக்கணம்) முழுமையாக திருத்தியமைக்கப்பட்டுப் புதிய பதிப்பு 1917ல் வெளியிடப்பட்டது. இந்த நூல்களை நாம் பின்னர் மதிப்பீடு செய்யலாம்.

மிகக்குறுகிய காலமான எட்டாண்டுகளில் இவை அனைத்தையும் செய்ய அவரால் எவ்வாறு முடிந்தது? அது இன்னும் புதிராகவே உள்ளது. அவருடைய

அன்றாட வாழ்க்கை முறை எவ்வாறிருந்தது?

அவர் காலை 6 மணியிலிருந்து 6.30க்குள் விழித் தெழுவார். எட்டுமணிக்கு ஒரு கோப்பை கோக்கோ குடிப்பார். காலை பத்து மணிக்குக் குளிப்பார். குளிய லுக்குப் பின் பூசை மற்றும் வழிபாடுகளில் கட்டாயமாக இருந்தார். சிறப்பான திருநாட்களில் மட்டுமே கோவி லுக்குச் சென்றார். முதன்மையான உணவு பகல் 11 மணிக்கு. பிறகு தரையில் விரித்த பாயில் குழந்தைகளு டன் சிறிதுநேரம் விளையாடுவார். தூக்கம் வந்தால் உள்ளே சென்று ஒரு மணி அல்லது ஒன்றரை மணிநேரம் தூங்குவார். இதன்பின் அவருக்கு நொறுக்குத் தீனி, சில பழங்கள் அல்லது சிறப்புத்தயாரிப்பான உணவுப் பண்டங்கள் வேண்டியிருக்கும். பிறகு அவர் தம் மேசை யில் படித்தல் அல்லது எழுதுதலில் ஈடுபடுவார். மாலை 3.30க்கு அவர் காபி குடிப்பார். அதன் பின்னர் கொஞ்ச நேரம் கடிதப் போக்குவரத்தைக் கவனிப்பார். 5 மணி அளவில் அவர் முற்றத்தில் உலாவுவார். அல்லது மன மகிழ் மன்றத்திற்குச் சென்று டென்னிஸ் விளையாடு வார். பொழுது சாய்ந்த பின் வீடு திரும்பி வந்து குளிப்பார். பின்னர் பலவகை இதழ்களையும் புத்தகங்க ளையும் படிப்பார். 8 மணியிலிருந்து 8.30 மணிக்குள் இரவு உணவு அருந்துவார். அதன்பின் குடும்பத்தினர் அனைவரும் சூழ்ந்து கொள்ளச் சிறிது நேரம் ஓய்வாகப் பொழுதுபோக்குவார். 10 மணிக்குப் பின்னரே படுக் கைக்குச் செல்வார்.

இது விடுமுறை நாட்களில் அமையும் வாழ்க்கை முறை. வேலைநாட்களில், குளியலும் உணவும் காலை 9 மணிக்குள் முடியும். சிறிதளவு பகலுணவு கல்லூரியி லேயே உட்கொள்வார். 4 மணிக்குப் பின் கல்லூரியிலி ருந்து நேராக யூனியன் கிளப்புக்குச் சென்று சீட்டு மற்றும் டென்னிஸ் ஆட்டங்களுக்குப் பிறகு மாலை

மங்கும் வேளைக்குப் பின் வீடு திரும்புவார்.

## குடும்ப வாழ்வு:

தம்புரான் ஓர் போற்றுதற்கு உகந்த குடும்ப வாழ்க்கை உடையவராயிருந்தார். மிகுந்த அக்கறையுடனும் பரிவுடனும் அவரது துணைவியார் மற்றும் குழந்தைகளைக் கவனித்துக் கொண்டார். அவர்களுக்கு வாழ்வு இனியதாகவும் எளியதாகவும் இருக்கவேண்டும் என்பதில் குறிப்பான அக்கறை காட்டினார். அவருக்கு ஏழு புதல்விகளும் ஆறு புதல்வர்களும் பிறந்ததில் தற்போது நான்கு புதல்வியரும் இரு புதல்வரும் உயிருடனுள்ளனர். தற்போது வாழ்ந்து வரும் புதல்வியருள் ஒருவர் மைய அரசின் அமைச்சர் ஜி. ரவீந்திரவர்மாவின் அன்னை ஆவார். இந்த நிகரற்ற அறிஞரின் மனிதநேயத்திற்கு எடுத்துக்காட்டாக விளங்குகிற நிகழ்ச்சிபற்றிய அவரது 1918ம் ஆண்டு நாட்குறிப்பின் ஒரு பகுதி இதோ:

'மாலையில் மனைவியையும் புதல்விகளையும் வான்காட்சிசாலைக்கு அழைத்துச் சென்றேன். அதன் மாடிவெளியிலிருந்து மேலைக் கடல் மற்றும் கிழக்கு மலைகளின் காட்சி வியக்கத் தக்கதாயிருந்தது. அத்துடன் வளர்பிறை நிலவு, மறையும் கதிரவன், வியாழன், சனி ஆகிய கோள்கள் அவற்றின் நிலவுகள் மற்றும் சில இரட்டை விண்மீண்கள் ஆகியனவும் காணப்பட்டன. குழந்தைகள் இவற்றைப் பார்த்துப் பெருவியப்பில் ஆழ்ந்தனர்'.

மிகவும் இளையவளான மகள் ஒரு முறை தன் அண்ணன் படிக்கும் கல்லூரியைப் பார்க்க விரும்பினாள், ஆகவே ஒரு நாள் பேராசிரியர் தம்முடன் அவளைக் கல்லூரிக்கு அழைத்துச் சென்று தன் வகுப்புகளில் ஒன்றில் ஒரு பாடவேளை முழுவதும் அமர்ந்திருக்குமாறு விட்டிருந்தார். இந்தப் பேராசிரியக் கவிஞரின் பண்பு நலனிலுள்ள மென்மைப்பாங்கைப்பற்றிய ஒரு

கண்ணோட்டத்தை இதன் மூலம் பெறுகிறோம். 1915ல் இவருடைய ஆசானும் மதிப்புக்குரிய மாமாவும் ஆன கேரளவர்மா காலமானார். இது இவருக்குப் பேரிடியாக இருந்தது.

ஆனாலும் வாழ்க்கை இதற்கெல்லாம் இரங்காமல் தொடர்ந்தது. இவர் மிக மிக வேலைப்பளுவிலிருந்த போதும் குடும்பத்துக்கான பொறுப்புக்களைச் அலட்சியப்படுத்தவில்லை. 1918ல் தம் மகன் இராகவ வர்மாவின் திருமணத்தைச் சிறப்பாக நடத்தினார்.

இந்தப் பேரறிஞரின் மேல் இறப்பின் நிழல் பரபரப்பின்றிப் படரத் தொடங்கியது. மோசமான சளி அந்த முடிவின் தொடக்கமாக இருந்தது. வயிற்றுப்போக்கு நிலைமையை மேலும் சீர்கேடடையச் செய்தது. மூன்று நாட்களுக்குள் தம்புரான் மிகவும் தளர்ந்து போனார். உடல் வெப்பநிலை 103ஐ எட்டி ஜன்னி தொடங்கியது. ஒரு முறை மருத்துவர் வந்தபோது அவர் கூறினார் 'டாக்டர், எனக்குச் சலிப்பாக இருக்கிறது. காய்ச்சல் தொடர்ந்து தொல்லை தருகிறது. உங்கள் நோயாளி பொறுமையிழந்துவிட்டார். * இந்த நகைச்சுவை அவருடன் உடன்பிறந்ததாகும். மருத்துவர் சென்றவுடன் தம் மகளை அழைத்து 'கீதகோவிந்தம்' பாடும்படி கூறினார். பின்னர் தாம் இனி எழுத எண்ணிய நாடகத்தின் நிகழ்ச்சிப் பின்னலைக் குறித்துக்கொள்ளுமாறு கூறினார்

ஆனால் இறுதியில் மகள் அவரை வற்புறுத்தி ஓய்வெடுக்கச் செய்தார். காய்ச்சல் கூடுவதும் குறைவதுமாக இருந்தது. பின்னர் டைபாய்டுக் காய்ச்சலின் குறிகள் தோன்றின. மருத்துவர்களின் முயற்சியும் பலன் தரவில்லை.

*1918* ஜூன் 18ம் நள், நோய்ப்படுக்கையில் வீழ்ந்த இரண்டு வாரத்திற்குள், இராஜராஜவர்மா தம் குடும்பத்

* Your patient is impatiend

தார் மட்டுமின்றிக் கேரளம் முழுவதும் கட்டுக்கடங்காத துக்கத்தில் ஆழ்ந்திட விண்ணுலகெய்தினார்.

## பகுதி ஐந்து

# மொழி மற்றும் இலக்கிய ஆய்வுகள்

இராஜராஜவர்மாவின் பன்முகத்திறமைகள் குறித்தும் அவர் எழுதிய நூல்கள் குறித்தும் நாம் ஆங்காங்கே தற்செயலான குறிப்புக்களை முன்னரே கண்டோம். நாம் இப்போது அவரது நாற்பதுக்கும் மேற்பட்ட இலக்கியப் படைப்புகளைப்பற்றிய விரிவான விருப்பு வெறுப்பற்ற மதிப்பீட்டைச் செய்யலாம். அவரது நூல்களை மூன்று பெரும் பிரிவுகளாக வகைப்படுத்துவதன் மூலம் இதனைச் சிறப்பாகச் செய்யலாம். அவற்றுள் முதலாவதான "மொழி மற்றும் இலக்கிய ஆய்வுக் கட்டுரைகள்" தாம் இந்தப் பகுதியில் வருகின்றன.

மலையாளத்திற்கு இலக்கியமொழி என்கிற அளவில் எட்டு நூற்றாண்டுகளுக்கு மேலான வரலாறு உள்ளது. பேச்சுமொழி என்னும் அளவில் இன்னும் பல நூற்றாண்டுகள் அது நிலவி வந்திருக்க வேண்டும். இருப்பினும் பதினெட்டாம் நூற்றாண்டு வரை, அதற்கு முறையான ஆராய்ச்சிப்படிப்புக்கேற்ற அடிப்படை நூல்கள், இலக்கணப் படைப்புகள், அகராதிகள் போன்றவை அமைந்திருக்கவில்லை. பதினெட்டாம் நூற்றாண்டின் பாதி வரைக்கும் கூட இந்த துறையில் செய்யப்பட்ட முயற்சிகள் குறைவே. பயன்மிக்க பெருமுயற்சிகளை இத்துறையில் காண 19ம் நூற்றாண்டின் பாதிவரை செல்ல வேண்டியிருக்கிறது. 14ம் நூற்றாண்டில் 'மணிப்பிரவாளம்' பற்றிய ஆராய்ச்சியாக சம்ஸ்கிருத மொழியில் எழுதப்பட்ட 'லீலாதிலகம்' நூலில் மலையாள இலக்கணம் மற்றும் செய்யுளியல் குறித்த பயன்மிக்க கருத்துக்கள் உள்ளன என்பதையும் கருத்தில் கொள்ள

மறக்காமலேயே, இந்தக் கருத்தை முன்வைக்கிறோம்.

இவ்வாறாக அகராதி தயாரித்தலும் இலக்கண நூல்கள் படைப்பதும் 250 ஆண்டுக்காலத்திற்கு குறைந்த வரலாற்றையே உடையவை: ஐரோப்பிய அறிஞர்கள் வருகைக்குப் பின்னரே மலையாள மொழியைப் பற்றி ஆராய்வதற்கான அறிவியல் ரீதியான அணுகுமுறை தொடங்கியது. மலையாளத்தைப் போன்ற ஒரு வளர்ச்சி யடைந்த மொழியில், ஐரோப்பியர் அதனை ஆராயும் வரை, இத்தகைய அடிப்படை நூல்கள் இல்லையென்பது பலரையும் வியப்பிலாழ்த்தலாம்.

ஆனால் இந்தச் சிக்கலை ஆழ்ந்து சிந்தித்துப் பார்த்தால் இதில் எந்த வியப்புக்கும் காரணமில்லை. ஒரு மொழியைத் தாய் மொழியாக அல்லது முதன் மொழி யாகக் கற்பது என்பதிலிருந்து இரண்டாம் மொழியாகக் கற்பது என்பது மிகவும் வேறுபட்டதாகும்.

ஒரு குழந்தை தாய்மொழியை வெளிப்படையாக எந்தக் கடினமான முயற்சியுமில்லாமல், காதால் கேட்ப தன் மூலமும் பிறர் பேச்சை அப்படியே அடியொற்றிச் சொல்வதன் மூலமும் கற்றுக்கொள்கிறது.

அக்குழந்தை, ஒலி இணைப்புக்கள், பொதுவான சொற்களின் தொகுப்பு மற்றும் வாக்கிய அமைப்புக் களை இயற்கையாகவும், கேள்வி எழுப்பாமலும் கற்றுக் கொண்டு விடுகிறது. ஆனால் ஒரு மனிதன் நன்குணரப்பட்ட கடின முயற்சியின் மூலமே ஒரு மொழி யைக் கற்கிறான். எனவே, அவன் மொழிக்கல்வியை உட்கிரகித்துக் கொள்ளும் போது காரணகாரியத் தொடர்பும், பகுத்தறிகிற திறனும் தேர்ந்தெடுக்கும் போக்கும் அதிகம் உள்ளவனாயிருக்கிறான். இந்தக் கார ணத்தினால்தான் அவன் இலக்கண அடிப்படையில் மொழி கற்பதை வரவேற்கிறான். அது அந்த மொழி யின் கட்டமைப்பை விரைவிலேயே புரிந்துகொள்ள

உதவியாக இருக்கிறது.

ஐரோப்பியர்கள் வாணிகத்துக்காகவோ மதசேவை புரியவோ கேரளாவுக்கு வந்தபோது செய்தித் தொடர்பில் சிக்கலை எதிர்நோக்க வேண்டிவந்தது. ஒரு புதிய மொழியைக் கற்க வேண்டியிருந்தது. ஆகவே அவர்கள் அடிப்படை மலையாளச் சொற்களின் பட்டியலை (அவற்றை ஒத்த லத்தீன், போர்ச்சுகீஸ் ஆங்கில சொற்களுடன்) தொகுத்து தங்களுக்காகவும் அவர்களைத் தொடர்ந்து வருபவர்களுக்காகவும் மலையாள இலக்கணத்தின் அடிப்படைக் கருத்துக்களை நிரல்படுத்தினர். இந்த முதல் முயற்சிகள் காலப் போக்கில் பின்வந்த கற்போரால் மேலும் முன்னேற்றமடைந்தன. அவர்களில் சிலர் புதிய மொழிகளைக் கற்பதிலும் அவற்றின் இலக்கண அமைப்புக்களைக் கூர்ந்தாராய்வதிலும் ஆர்வமும், திறமும் கொண்டிருந்தனர்.

மலையாள மொழி இதுவரை உருவாக்கிய இலக்கண அறிஞர்களில் தலைசிறந்தவர் என இராஜராஜவர்மா கருதப்படுகிறார். அவருடைய படைப்பான கேரளபாணினீயம் ஒரு நிலைபெற்ற அரும் படைப்பாக எல்லோராலும் ஒத்துக்கொள்ளப்பட்டுள்ளது.

குறிப்பாக இந்தத் துறையில் அவரது பங்கை சரியாக மதிப்பிட. கேரளபாணினீயம் வெளியிடப்படுவதற்கு முன்னர் இருந்த இலக்கண நூல்களைப் பற்றி ஒரு கணிப்பை நாம் பெற வேண்டும்.

### ஐரோப்பிய அறிஞர்களின் படைப்புகள்

1. இராபர்ட் டிரம்மாண்ட்: கிராமர் ஆஃப் மலபார் லாங்குவேஜ் (1799) (மலபார் மொழியின் இலக்கணம்)
2. எஃப். ஸ்பிரிங்: அவுட்லைன்ஸ் ஆஃப் கிராமர்

ஆஃப் தி மலயாளம்
லாங்குவேஜ் (1839)
(மலையாள மொழி இலக்கணம்
பற்றிய சுருக்கக் குறிப்பு)

3. ஜோசப் பீட்: எ கிராமர் ஆஃப்
தி மலையாளம் லாங்குவேஜ்
(1854) (மலையாள மொழி
இலக்கணம்)

4. குண்டர்ட் (மற்றும் கார்த்வைட்): கேடசிசம் ஆஃப்
மலையாளம் கிராமர்
1860 (மலையாள
இலக்கண வினாவிடை)

5. குண்டர்ட்: மலையாள பாஷா
வியாகரணம் (1868)
(மலையாள மொழி இலக்கணம்)

6. எல்.ஜே .ஃபாரன்மெய்யர்: எ புரக்கிரஸ்ஸிவ் கிராமர்
ஆஃப் மலையாளம், பார்
யுரோப்பியன்ஸ் (1889)
(ஐரோப்பியர்களுக்கான
மலையாள வளர்முறை
இலக்கணம்)

## கேரள அறிஞர்களின் படைப்புகள்

1. பெயர் தெரியாதவர்: லீலாதிலகம் (14ம் நூற்றாண்டு)

2. ரெவ. ஜார்ஜ் மாத்தன்: மலையாளமயுடெ வியாகரணம் (மலையாளத்தின் இலக்கணம்)

3. பச்சு மூத்தாத்து: கேரள பாஷா வியாகரணம் (1876)

4. கோவுண்ணி நெடுங்காடி: கேரள கௌமுதி (1878)

மேற்குறித்த பத்து படைப்புகளில் மிகவும் அறிவுத்திறம் வாய்ந்தவை இரண்டு: 1. டாக்டர் குண்டர்ட் எழுதிய மலையாள பாஷா வியாகரணம் (1868)

2. ரெவரெண்ட் ஜார்ஜ் மாத்தன் எழுதிய மலையாளமுடே வியாகரணம் (1863)

முதல் தொகுப்பில் இருக்கும் டாக்டர் குண்டர்ட்டின் நூல் தவிர அனைத்து நூல்களும் ஐரோப்பியர்களுக்காக உருவானவை. அவைகள் வெளிநாட்டினரை மொழியின் நுணுக்கங்களை அறிமுகம் செய்துகொள்ள உதவும் தொடக்க நிலைக் கருத்துரைகள். ஐரோப்பியக் கல்விமான்கள் மொழி அமைப்பை நுணுகி அறியும் ஐரோப்பிய செய்முறை நுட்பங்களில் பழகிவந்தவர்கள். முழுக்க முழுக்க வேறு மொழிக்குடும்பத்தைச் சேர்ந்த ஒரு மொழியை அவர்கள் எடுத்து அறிந்த காலத்திலும் அதே செய்முறைகளின் செல்வாக்கு அவர்களிடமிருந்தது. அதே போல உள்நாட்டுக்கல்வியாளர்கள் சம்ஸ்கிருத மொழியின் இலக்கண நூல்களை நன்கறிந்திருந்தனர். மொழி இலக்கணப் பணியில் அவர்கள் சம்ஸ்கிருத இலக்கண ஆசிரியர்களின் அணுகுமுறை மற்றும் சொல்லமைப்பின் குறிப்பிடத்தக்க செல்வாக்கை ஏற்றிருந்தனர். இது தொடர்பாக பிஷப் இராபர்ட்

கால்ட்வெல் அவர்களின் 'ஏ கம்பேரிடிவ் கிராமர் ஆஃப் திராவிடியன் ஆர் சவுத் இந்தியன் பேமிலி ஆஃப் லாங் குவேஜஸ்' 'திராவிட மொழிகளின் அல்லது தென்னிந்திய மொழிகள் குடும்பத்தின் ஒப்பிலக்கணம்' (1856) என்றும் நூலைக் குறிப்பிடத் தவறக் கூடாது. சம்ஸ்கிருதத்து டனோ, வேறு எந்த இந்தோ ஆரிய மொழியுடனோ பரம்பரைத் தொடர்பு சிறிதும் அற்ற தனிக்குடும்பத்தைச் சேர்ந்தவை தென்னிந்திய மொழிகள் என்பதை எந்தவி தமான ஐயத்திற்கும் இடமின்றி நிலைநாட்டியவர் கால்ட்வெல் தான். ஆகவே அவர் ஐரோப்பாவில உரு வாக்கப்பட்ட செயல்முறைகளைப் பயன்படுத்திய போதும், மொழிக் கட்டமைப்பை அணுகிய முறையில் இந்தோ ஐரோப்பிய மொழித் தொடரமைப்பின் தாக்கத் துக்குப் பலியாகாமல் இருந்தார்.

**கேரளபாணினீயம்:**

கால்ட்வெல்லின் உயர்தனிப்படைப்பு வெளியிடப் பட்டபின் தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம், ஆகிய மொழிகளின் இலக்கணம் குறித்து எழுதப்பட்ட சிறந்த நூல்கள் ஒப்பிலக்கணத்தின் குறிப்பான நலன்க ளைப் பெற்றன. அந்தத் தன்னிகரற்ற படைப்பின் உள்ளார்ந்த சீர்மையை முழுக்க உய்த்துணர உள்நாட்டு அறிஞர்களுக்குச் சிலகாலம் ஆனது. மலையாள இலக்க ணம் பற்றிக் கருதும்போது, டாக்டர் குண்டர்ட்டும் டாக் டர் கால்ட்வெல்லும் சில மொழியியல் சிக்கல்களில் வேறுபட்ட போதும்கூட ஒருவருக்கொருவர் நெருக்க மான ஒத்துழைப்புடன் செயல்பட்டனர்.

இந்த இரண்டு அறிஞர்களுடைய கருத்துக்களையும் இராஜராஜவர்மா கவனமாக ஆராய்ந்தார். அதுபோ லவே ரெவரெண்ட் ஜார்ஜ்மாத்தனின் ஆய்வுக் கருத்துக் களையும் அணுகி அறிந்தார். ஆனாலும், சம்ஸ்கிருத மரபில் வளர்க்கப்பட்டதால், அவரது முதல் முயற்சி

சம்ஸ்கிருத அமைப்பில் மலையாள இலக்கணத்தை உரு வாக்குவதாக இருந்தது. தம் கல்விப் பணியின் தொடக்க காலத்திலேயே இதனை இயற்றி அதற்குக் 'கேரளபாணி னீயம் (1896) என்னும் பெயரும் இட்டார். அதற்கு அவர் கேரளபாணினீயம் என்று பெயர் இடக்காரணம் என்ன? பாணினி, சம்ஸ்கிருத மொழியின் பெரும்புகழ்பெற்ற இலக்கண ஆசிரியர் என்பது நன்கறியப்பட்ட ஒன்று. அத்தகு பெரும்புகழ் பெற்றிருந்த படியால் பாணினி அல்லது பாணினீயம் என்னும் சொற்களே இந்தியமரபில் இலக்கணத்தைக் குறிப்பிடும் சொற்களாக மாறின. ஆகவே 'கேரளபாணினீயம்' என்பது கேரள மொழியின் இலக்கணத்தைப் பாணினீய மரபில் எழுதிய நூல் என்று பொருள்படும். பாணினீய மரபில் ஒரு முதன்மையான உத்தி 'சூத்ர விருத்தி' முறை அகும். சூத்ரங்கள் என்பவை மனப்பாடம் செய்வதற்கேற்ற சுருக்கமான எளிய செய்யுள் வரிகள் ஆகும். அனால் அதற்கு ஒரு 'விருத்தி' அல்லது விளக்கவுரை இல்லாவிட்டால் அவற்றின் பொருள் விளங்காது.

இந்த இலக்கண நூல் கிட்டத்தட்ட இருபதாண்டு கள் புழக்கத்தில் இருந்தது. ஆனால் மலையாளத்தைச் சிறப்பாகப் பயிலும் நவீன மாணவர்களுக்கு முற்றிலும் வேறு மாதிரியான இலக்கணம் தேவை என்பதை நூலை இயற்றிய இவர் உணர்ந்தார் பி.ஏ. மலையாளம் விரும் பப் பாடத்துக்கு வகுப்புகள் எடுக்கும் போது இவர் இந்தத் தீர்மானத்துக்கு வந்தார். அப்போது மலையாள இலக்கணம் நடத்துவதற்குத் தயாரித்த இலக்கணக் குறிப் புகள் இறுதியாக ஒரு புதுப்பிக்கப்பட்ட இலக்கண நூலாக உருவாகி 1917ல் வெளியிடப்பட்டது. புதுப்பிக் கப்பட்ட புத்தகம் ஒரு மறு பிறவி எடுத்த நூல் போலத் தோன்றியதால், இராஜராஜவர்மா, பழைய, "கேரள பாணினீயம்" என்னும் பெயரை வைக்க விரும்பவில்லை. ஆனால் அவரது நண்பர்கள் அந்தப் பெயருக்கிருந்த நற்பெயரை இயக்கவிரும்பவில்லை. எனவே, புதிய பதிப்

பும் பழைய தலைப்பிலேயே வெளிவந்தது. இது கடந்த அறுபதாண்டுக்காலமாக அதிகார பூர்வ நூலாகக் கருதப் பட்டு வருகிறது. வருங்காலத்திலும் இது மிஞ்சப்பட்டு விடும் என்பதற்கு வாய்ப்பில்லை. இந்தப் படைப்பின் பெருமை மிகவும் அதிகமாகி இராஜராஜவர்மா கேரள பாணினி என்றே குறிப்பிடப்பட்டார்.1

இவரது மாணவர்களில் ஒருவராகிய எஸ். அனந்தன் பிள்ளை எழுதிய இராஜராஜவர்மாவின் சிறிய வாழ்க்கை வரலா றும் இதே தலைப்பைத்தான் கொண்டுள்ளது.

ஆழ்ந்த சம்ஸ்கிருத அறிஞரான இராஜராஜவர்மா, தமிழிலும் நல்ல புலமை உள்ளவராயிருந்தார். கன்னடம், தெலுங்கு மொழிகளையும் பயன்படுத்தும் அளவுக்குக் கற்றிருந்தார். கால்ட்வெல், குண்டர்ட் ஆகியோரது நூல்களை அடிக்கடி பயின்றுவந்த இராஜராஜவர்மா, மேற்குறித்த மொழிகளிலுள்ள அதிகார பூர்வ இலக்கண நூல்களையும் படித்தறிந்தார். எல்லா அறிஞர்களிலும் கால்டுவெல்லிடம் மட்டும் அவர் மிகப் பெரும் மரியாதை வைத்திருந்தார். அவ்ரது படைப்பில் பல இடங்களில் அவர் கால்டுவெல்லின் கருத்திலிருந்து மா றுபடுவதில் மனச் சங்கடப் பட்டார் எனத் தெரிகிறது. கால்டுவெல் கூறுவது தவறு என்று அவர் உறுதியாக முடிவு செய்த இடங்களில் அவர் அந்த ஐரோப்பிய அறிஞரின் கருத்தை எதிர்த்து எழுதினார். அவருடைய முந்தைய படைப்புக்குக் கேரள பாணினீயம் என்னும் தலைப்பு பொருத்தமென்றால், புதிய பதிப்பு கேரள கால்டுவெல்லியம் என்று அழைக்கப்படுவதே பொருத் தம். அந்த அளவுக்கு நூலின் பல இடங்களிலும் கால்டு வெல்லைச் சார்ந்து தம் கருத்தக்களை எழுதியுள்ளார். ஆனால் ஓரஞ்சாராமல் நடுநிலையுடன் கூறினால், இந்த இரண்டு தலைப்புகளுமே பொருத்தமற்றன. ஏனெனில் அவர் பாணினியையோ கால்டுவெல்லையோ கண்மூடித்

1. திராவிட மொழியியல் கூட்டமைப்பு தனது திருவனந்தபுரம் அலுவல கத்திற்கு இராஜராஜவர்மாவின் சேவைகளை நினைவு கூரும் வகையில் கேரளபாணினி கட்டடம் எனப் பெயரிட்டுள்ளது.

தனமாக நகலெடுத்து எழுதவில்லை. 'மரபு வழி இலக்கண அமைப்புக்களையும் புதிய அமைப்புக்களையும் அவர் மிகவும் கலைப்பாங்குடன் இணைத்தெழுதியதால் இந்நூல் கேரள இலக்கண நூல்களில் புதுயுகம் படைப்பதாய் அமைந்தது.

புதிய பதிப்பில் இராஜராஜவர்மா, பழைய பதிப்பிலுள்ள சூத்திரங்களை முற்றிலுமாக நீக்கிவிட்டார். அவற்றுக்குப் பதிலாக எளிமையான, நீண்ட விளக்கங்கள் தேவைப்படாத செய்யுள்களை அமைத்தார். எப்போதெல்லாம் விளக்கம் தேவைப்படுகிறதோ அப்போது விளக்கங்களையும் அவரே கொடுத்திருந்தார். சம்ஸ்கிருத மொழியின் பற்பல பொருத்தமான இலக்கணச் சொற்களை அவர் பயன்படுத்தி இருந்தார். சம்ஸ்கிருதச் சொற்களைப் பயன்படுத்தினாலும் சம்ஸ்கிருத இலக்கணத்தையே முழுவதுமாக மலையாளத்திற்கு நெடுங்காடியைப் போல இவர் இறக்குமதி செய்து விடவில்லை. இவர் தமிழ் இலக்கணத்திலிருந்தும் சில இலக்கணச் சொற்களைத் தகுதி கருதிச் சேர்த்திருந்தார். இருந்த போதிலும் அவருடைய முழுமையான அணுகுமுறையும் இந்நாட்டுக்குரிய கூறுபாடுகளைக் கையாண்ட முறையும் குறிப்பாக மேற்கத்தியப் பாங்காகத் தோன்றுகின்றன. ஆனால் அவர் குண்டர்ட்டைப் போலவோ ஜார்ஜ் மாத்தனைப் போலவோ மலையாள இலக்கணத்திற்கு மேற்கத்தியச் சாயலைக் கொடுத்துவிடவில்லை.

இந்த நூல் குறைகளையும் கொண்டிருந்தது. சில முரண்பாடுகளும் தவறுகளும் இருந்தன. திருத்தப்பட்ட பதிப்பை வெளியிட்டபின் அவர் ஓராண்டுக்கும் குறைவாகவே உயிர்வாழ்ந்தார். அவர் அதிக காலம் வாழ்ந்திருப்பாரேயானால் அந்த நூலைப் பெருமளவு செம்மைப்படுத்தியிருப்பார். கேரள பாணினியம் பகுத்தாராய்தல் முறையைப் பின்பற்றவில்லை. குண்டர்ட்டின் நூலைப்போல இவர் நூலில் பழம் இலக்கண நூல்களின்

மேற்கோள்கள் மிக அதிகம் இல்லை. பேச்சுவழக்கு வடிவங்களுக்கு ரெவ. மாத்தன் செலுத்திய அளவுக்கு கவனத்தை இவர் செலுத்தவில்லை. பீதிக (பீடிகை) என்று சொல்லப்பட்ட மிக நீண்ட முன்னுரை நூலுக்கு மிகச் சிறந்த இணைப்பாக விளங்கியது. தமிழ் மற்றும் மலையாளத்தின் மொழியியல் கூறுகளை ஒப்பிட்டு ஆராய்ந்தது. இதில் நூலாசிரியர், மலையாளம் ஒரு தனித்தியங்கும் மொழியாக உருவாகி வளர்ந்த விதத்தையும் தமிழுடன் அதற்குள் உறவையும் ஆய்ந்துள்ளார்.

புதிய பதிப்புக்கு எழுதிய தகைமைவாய்ந்த முன்னுரையில் இவரது முன்னாள் மாணவரும் உடன் பணிபுரிந்தவருமான பி.கே. நாராயணபிள்ளை (இவர் பின்னாளில் திருவாங்கூர் மாநில உயர்நீதி மன்றத்தின் நீதிபதியாக விளங்கியவர்) இந்த பெருமை மிக்க நூலினைப்பற்றிய திறமான மதிப்பீட்டைக் காண்கிறோம். '...சாதாரண உயிரெழுத்து, மெய்யெழுத்து முதல் வடிவ வளர்ச்சி வரை எந்த ஒரு இலக்கணப் பிரிவிலும் தம் சிறப்பு வாய்ந்த பொதுநிலைப்படுத்தும் ஆற்றலையும் நுண்ணிய உற்று நோக்கும் திறனையும் செலுத்தாமல் விடவில்லை. இவர் பல புதிய செய்திகளைக் கூறியுள்ளார்.... பல செய்திகளைப் புதிய முறையிலும் கூறியுள்ளார். சொல் இலக்கணத்தை ஐந்து பிரிவுப் பாகுபாடாக அமைத்தது தனித்தன்மைவாய்ந்ததாகும். இது இவருக்கு முந்திய இலக்கண நூலார் சம்ஸ்கிருதத்தை அப்படியே அடியொற்றி அமைத்த மூன்று வகைப் பாகுபாட்டிலிருந்து வேறுபட்டதாக அமைந்தது.

பாணினி வரலாற்றுப் பாங்கைவிட காரணகாரியப் பாங்கினையே பின்பற்றினார். ஒரு வழக்கிழந்த மொழியைப் பற்றியே அவரது அமைப்பு இருந்ததால் பெரும்பாலும் அது கருத்திற்கொள்ளப்பட வேண்டியதே இல்லை. ஆனால் அந்த அடிப்படை அதே அளவுக்கு உகந்ததாக மலையாளம் போன்ற விரிந்து பரவிவரு

கின்ற, வளர்ந்துவருகின்ற, சிறப்புமிக்க வரலாறுள்ள, மொழிக்கு ஒத்துவருமா? ஆகவே இந்தப் பதிப்பில் நாம் அடிப்படை அமைப்பு முழுவதுமாக மாற்றி அமைக்கப் பட்டிருப்பதையும் வரலாற்றுப் போக்குகாரணகாரியப் போக்கை ஒதுக்கி முன்வந்திருப்பதையும் அதே நேரத்தில் காரணகாரிய முறை கைவிடப்படாதிருப்பதையும் காண் கிறோம்..... நம் மொழி ஆய்வுக்கு விலைமதிப்பில்லாத இந்தப் புதிய சேர்க்கையை எண்ணி நாம் பெருமிதம் கொள்கின்றோம். இந்தப் பெருஞ்சிறப்புள்ள வெளியீட் டின் மூலம் மலையாளமொழி பேசும் மக்கள் பெரும் கைம்மாறு செய்யவேண்டிய உயர் நிலைக்குச் சென்ற ஆசிரியரை நெஞ்சாரப் பாராட்டுகின்றோம்.'

முந்தைய பதிப்புக்கான முன்னுரை ஆசிரியரின் மாமா கேரளவர்மாவால் எழுதப்பட்டது. இரண்டு பதிப் புக்களுமே அவருக்குப் படையலாக வைக்கப்பட்டன. சிற்சில குறைகளும் தவறுகளும் இருந்தாலும் கேரளபா ணினியம், மலையாள இலக்கணம் பற்றிய பிற நூல்களை யெல்லாம் ஒளியிழக்கச் செய்து சிறந்த நூலாக விளங்குகிறது. அறுபதாண்டுகள் கடந்த போதிலும் இன்றும் முதன்மையான இலக்கண நூலாக ஆட்சி புரிகின்றது.

## பிற இலக்கண நூல்கள்

கேரளபாணினியத்தின் இரண்டு பதிப்புகளுக்கும் இடையே 21 ஆண்டுகால இடைவெளி இருந்தது என்ப தைக் கண்டோம், இந்தக் காலகட்டம் முழுவதும் மலை யாள இலக்கணம் இராஜராஜவர்மாவின் மனத்தைவிட்டு அகலாது இருந்தது. கேரளபாணினியம் ஆராய்ச்சிப் புலமை வாய்ந்த பெருநூல் என்பதில் ஐய மில்லை. ஆயினும் பள்ளி மாணவர்களுக்காக எளிய நூல்கள் வேண்டியதாயிருந்தன. அந்தப் பற்றாக்குறையை நீக்கத் தம்பிரான் முனைந்தார்.

**சப்தசோதினி:**

1902ல் வெளியிடப்பட்ட சப்தசோதினி, மூன்று மாத கால முனைப்பான செயல்பாட்டின் விளைவாகும், கேரளபாணினியம் கற்பதற்குக் கடினமாயிருப்பதால் உயர்நிலைப்பள்ளி மாணவர்கள் எளிய இலக்கண நூலை வேண்டியபோது அவர்களுக்குப் பயன்படும் நோக்கத்துடன் ஆசிரியர் இந்த நூலை எழுதினார். எளிமையான விளக்க முறைகளும் புரியக்கூடிய எடுத்துக்காட்டுக்களும் இந்த நூலைப் பெரிதும் விரும்பத்தக்கதாக ஆக்கின. 175 பிரிவுகளுள்ள இந்நூல் ஒலியியல், சொல்லியல், வாக்கிய அமைப்பியல், சொற்பிறப்பியல் என்னும் பெரும்பிரிவுகள் அமைந்ததாகும். சில திருத்தங்களும் பயனுள்ள மாற்றங்களும் சேர்க்கப்பட்ட கேரளபாணினியத்தின் தொகுப்புரை என்று ஆசிரியர் இந்நூலைக் கருதுகிறார்.

**பிரதம வியாகரணம்:**

சப்தசோதினியின் வெளியீட்டுக்குப் பிறகும் கீழ் வகுப்புகளுக்கான இலக்கணநூல்கள் மேலும் தேவையென இராஜராஜவர்மா உணர்ந்தார். பொதுக்கல்வி இயக்குனரும் அதே கருத்தைத் தெரிவித்தார். இவ்வாறாக அவர் உருவாக்கிய இரண்டு நூல்களில் முதலாவது பிரதம வியாகரணம் (1906). நூலின் தலைப்பு சுட்டிக் காட்டுவது போன்றே இந்த இலக்கணநூல் தொடக்க நிலைக் கல்விக்காக அமைந்ததாகும்.

**மத்யம வியாகரணம்:**

அதே அமைப்பில் மத்யமவியாகரணம் என்னும் நூல் நடுநிலைப் பள்ளி மாணவர்களுக்காக 1907ல் வெளியிடப்பட்டது. மலையாள இலக்கணத்தின் அடிப்படைக் கூறுகள் இந்த இரண்டு படைப்புகளிலும் தெளிவாக விளக்கப்பட்டுள்ளன. ஆசிரியர்களும் மாணவர்களும் இப்படைப்புக்களை மிகவும் பயனுள்ளதாகவும் புரிந்துணர எளியதாகவும் கருதினர். ஒரு

மாதத்துக்குள் மற்றொரு பதிப்பும் அடுத்த ஆண்டில் மூன்றாவது பதிப்பும் வெளியிடப்பட்டதிலிருந்தே இந்த நூல்கள் பெற்ற வரவேற்பை அறியலாம்.

அறிவு நுட்பம் வாய்ந்ததாயிருப்பினும், டாக்டர் குண்டர்ட்டின் இலக்கணநூல் சில குறைகளை உடையதா யிருந்தது. நூலிலுள்ள கருத்துக்கள் முறையாக ஒழுங்கு படுத்தப்படவில்லை. அரிய இலக்கணச் சொற்கள் கடினமான அமைப்பிலிருந்தன. கேரளபாணினியத்தின் முந்தைய பதிப்பும் காலத்திற்குப் பொருந்தாத பழைய அமைப்பின் சில குறைகளை உடையதாயிருந்தது. சப்த சோதினி கணிசமான அளவுக்கு ஆங்கில முறையைக் கொண்டிருந்தது. மத்யமவியாகரணம் பகுத்தாராயும் முறையிலும் பிரதம வியாகரணம் தொகுத்து விளக்கும் முறையிலும் அமைந்திருந்தன. கேரள பாணினி மலை யாள இலக்கணத்தை மலையாளிகள் எளிதில் புரிந் துணரும் வகையிலும் தங்குதடையற்ற போக்கிலும் அமைத்துத் தந்தார்.

### மணி தீபிகா:

மலையாள இலக்கியத்தின் சில பிரிவுகளான சம்பு, ஆட்டக்கதா போன்றவற்றை உரியமுறையில் புரிந்து கொள்ளவும் இலக்கிய நலம் காணவும் சம்ஸ்கிருத மொழியில் நல்ல புலமை இன்றியமையாததாகும். ஆகவே மலையாள இலக்கியம் கற்போருக்குச் சம்ஸ்கிருத இலக்கணத்தில் நல்ல திறமை வேண்டியிருந்தும், பலருக் கும் பாணினியைப் புரிந்து கொள்வது கடினமாயிருந்தது. ஆகவே சம்ஸ்கிருத இலக்கணத்தை எளிய முறையில் மலையாளத்தில் கூறும் நூல் நீண்டகாலத் தேவையாயி ருந்தது. இத்தேவையை நன்குணர்ந்த இராஜராஜவர்மா அத்தகைய நூலொன்றை எழுதும் நாட்டமுடையவராய் இருந்தார். ஆயினும் 1908ல் தான் அதனை நிறைவேற்ற முடிந்தது. ஆவர் மூன்றுமாத காலம் இடைவிடாது

செயல்பட்டு மணிதீபிகா நூலை வெளிக்கொணர்ந்தார். மணிப்பிரவாளம் என்னும் சொல்லில் வருவது போல இதில் மணி என்பது சம்ஸ்கிருதத்தைக் குறித்தது. இதன் கையெழுத்துப்படி இலக்கண அறிஞர் துரவூர் நாராயண சாஸ்திரிகளால் பார்க்கப்பட்டு கேரளவர்மாவால் அங்கீகரிக்கப்பட்டது. நூலும் கேரளவர்மாவுக்கே படைக்கப் பட்டது. அதிலிருந்து மலையாள மாணவர்கள் அந்தப் படைப்பின் மூலம் சம்ஸ்கிருத இலக்கணத்தின் சிறப்புக் கூறுகளுக்கு ஆற்றுப்படுத்தப்பட்டனர்.

## லகு பாணினியம்:

மணிதீபிகாவை எழுதி முடித்து நான்கைந்து மாதங்கள் சென்ற பின் ஏ.ஆர்.சம்ஸ்கிருத இலக்கணத்தைப் பாணினியின் அடியொற்றி எழுதும் மற்றொரு திட்டத்தைத் தொடங்கினார். இவரது நாட் குறிப்புக்கள் இவர் கேரளவர்மாவிடமிருந்து இந்தச் சிறந்த படைப்பை உருவாக்குவதில் தொடர்ந்து பெற்ற ஊக்குவிப்பையும் ஆலோசனைகளையும் காட்டுகின்றன. ஐந்து மாத காலத்தில் இந்தப் பணி நிறைவுபெற்றது. (1910). சம்ஸ்கிருதத்திலுள்ள முன்னுரையும் ஆங்கிலத்தில் உள்ள அறிமுகமும் ஆசிரியரின் நோக்கத்தை வெளிக்காட்டுகின்றன. அறிமுகத்திலிருந்து ஒரு பகுதியை இங்கு காண்போம்.

'பாணினி, இப்போதும், தொல்பழங்காலத்தைப் போலவே, ஈடிணையற்ற இலக்கண ஆசிரியராக விளங்குகிறார் என்பது உண்மை. அவருடைய சூத்திரங்களின் குறையிலாப் பெருநிறையும், அவற்றின் பெருவிரிவுமே அவற்றைச் கற்பதற்குக் கடினமாக்கின. அதற்கான நீண்ட ஓய்வும் பிறவற்றைத் துறந்து அதிலேயே ஆழ்ந்து போகும் துறவு மனப்பாங்கும் இல்லாதவர்கள் அவருடைய எட்டு இயல்களின் (அஷ்டாத்யாயி) கடினமான உட்பொருளைக் கற்றுத் தேர்வது அரிது. பெருமைமிக்க உரையாசிரியர்களாகிய பதஞ்சலி, வார்த்திகூகாரா காரிகா

ஆசிரியர் ஆகியோரும் பொருளை மறைத்து அளவற்ற வார்த்தைகளால் மேகம் மூடுவதுபோல விரித்துக் கூறு வதால் படிப்போரின் சிரமங்களை அதிகமாக்கிவிட்ட னர். இருப்பினும் சம்ஸ்கிருதத்திலேயே ஓர் எளிய இலக்கண நூலினைப் பாணினியின் இணையற்ற சூத்தி ரங்களின் அடியொற்றியே அவரது இலக்கணக் கொள்கைகளை எளிமைப்படுத்தி தற்கால வழிமுறை களின்படி அவற்றை எடுத்துரைத்து எழுதினால் அது பாணினிக்கும் பழங்கால இலக்கியத்துக்கும் தக்க அறிமு கமாக அமையும் என்றும் அம்முயற்சி மேற்கொள்ளத்தக் கது என்றும் எனக்குத் தோன்றுகிறது.'

அத்தகைய முயற்சி மேற்கொள்ள மிகவும் தகுதி யான தென்பதை அனுபவம் காலப்போக்கில் காட்டியது. இந்தியா முழுவதிலும் வெளிநாட்டிலும் கூட மாணவர் களும், அறிஞர்களும் இதே கருத்தைக் கொண்டிருந்தனர். ஜெர்மனி நாட்டு 'போன்' பல்கலைக்கழகத்திலிருந்து பேராசிரியர் ஜேக்கப் ஆசிரியருக்கு எழுதியது.

'தங்களுடைய படைப்பின் மேன்மை குறித்து நான் முழுமன நிறைவு கொண்டேன். அடுத்த கோடைகாலத் தில் என் மாணவர்களுடன் பாணினியைக் கற்கும் காலத் தில் "சித்தாந்த கௌமுதிக்குப்" பதிலாக இந்நூலைப் பயன்படுத்த முடிவு செய்துள்ளேன்.

பம்பாய் வில்சன் கல்லூரி பேராசிரியர் எம்.எம்.பாட் காமர் எழுதுகிறார்.

'இந்த நூல் மிகச் சிறப்பாகத் திட்டமிடப்பட்டுள் ளது. மிகத் தெளிவான முறையில் சம்ஸ்கிருத இலக்க ணம் பற்றிய அறிவைத் தருவது மட்டுமன்றிப் பாணினியின் உட்கருத்தையும் மொழிப் பாங்கையும் அறி முகப்படுத்துகிறது.

புனே, டெக்கான் கல்லூரிப் பேராசிரியர் ஆர். சி.

ரானடே கீழ்வருமாறு பாராட்டினார்.

'இந்த நூலைப்படித்துச் சொல்லும்போது பாணினியின் சூத்திரங்கள் முழுமையாக மாற்றி வடிவமைக்கப்பட்டுப் புதிய வடிவத்துடன் விளங்குவதைக்கண்டு வியப்புறேன். புத்தகத்திற்கு நீங்கள் சேர்த்துள்ள வனப்புமிக்க முன்னுரை, சம்ஸ்கிருதமொழி, உங்களைப் போன்ற அறிஞர்களின் கையில் விளங்கும்போது, வழக்கிழந்த மொழி என்னும் அவச் சொல்லைத் தாங்கவேண்டிய அவசியமில்லை எனக் காட்டுகிறது. அம்மொழியின் முழுமையான புத்துணர்ச்சியும் அதற்கு மீண்டும் கிடைத்துவிட்டது என்றே தோன்றுகிறது'.

அஷ்டாத்யாயியின் 2978 சூத்திரங்கள் 1959 ஆகக் குறைக்கப்பட்டன. ஆசிரியர் 1912ல் லகு பாணினியத்தின் இரண்டாம் பகுதி ஒன்றை வெளியிட்டார். அது 'வைதிக காண்டம்' 'ஸ்வரகாண்டம்' மற்றும் மொழி பற்றிய கீழை நாட்டு மற்றும் மேல்நாட்டு நிபுணர்களின் ஆய்வுரைகள் அடங்கியதாயிருந்தது.

## இலக்கியத்தின் அறிவியல் அமைப்பு

ஒரு மொழியைக் கற்றுக்கொள்ள மிகவும் முதன்மையான கருவிகளான இலக்கண நூல்களும் அகராதிகளும் விளங்குகின்றன.இதுவரை இலக்கணத்திற்கு இராஜராஜவர்மா ஆற்றிய பங்கினைப் பார்த்தோம். அவருக்கு பெய்லி, குண்டர்ட் ஆகியோரின் அகராதிகளை ஒதுக்கிவிடும் அளவுக்கு மிகச் சிறந்த அகராதி ஒன்று உருவாக்க வேண்டுமென்ற பேராவல் இருந்தது.ஆனால் அவர் மிக அதிகமாகப் பணிகளில் ஈடுபட்டிருந்ததால் தேவையான நேரம் அவருக்குக் கிடைக்கவில்லை. மேலும் அவர் இலக்கியத்தை நுணுகிப் பயில்வோருக்கும் எழுத்தாளர்களுக்கும் உதவும் வகையில் சில அடிப்படையான நூல்களை எழுதுவது முதன்மையானது எனக் கருதினார்.யாப்பியலும் அணியியலும்

செய்யுள் இயற்றுவதற்கான முதன்மையான பிரிவுகளா கும். இந்த இலக்கியப் பாங்கு குறித்துக் கீழை நாட்டினரும் மேலை நாட்டினரும் பெருமளவுக்குக் கருத் துக்கள் நல்கியுள்ளனர். இராஜராஜவர்மா இவ்விருவ கைக் கருத்துக்களிலும் பயிற்சியுள்ளவர். இருபிரிவிலுமுள்ள சிறந்தவற்றை இணைத்துக்கொள்ள வேண்டுமென்று விரும்பினார். மலையாளத்தில் உரைந டையும் கவிதையும் அவற்றுக்கான உத்திகள் வடிவம் ஆகியவற்றைக் குறித்து ஒரே வகையான அணுகுமுறை யைக் கையாளவேண்டிய தேவையில்லை என அவர் உணர்ந்தார். மலையாளக் கவிதை உரைநடையை விட நீண்ட கால பாரம்பரியம் உடையது. எனவே செய்யுள் இயற்றும் கலைகுறித்து சம்ஸ்கிருத யாப்பு, அணி முறை யைச் சார்ந்திருப்பதற்கு நியாயமுண்டு, பாட்டின் பொருள் எந்த வரையறைக்கும் உட்பட்டதல்ல என்பதற் குப் பாதகமில்லாமல் தான் இக்கருத்து கூறப்படுகிறது. ஆயினும், மலையாள உரைநடை வடிவத்திலும் உள்ளடக் கத்திலும் ஆங்கிலத்தைச் சார்ந்திருப்பதே பயன்தரத்தக் கது. இத்தகைய கருத்துப் பாங்கு பாஷாபூஷணம், விருத்த மஞ்சரி, மற்றும் சாகித்யசாஉற்யம் ஆகிய ஏ.ஆர். அவர் களால் எழுதப்பட்ட மூன்று நூல்களிலும் தெளிவாகக் காணப்படுகிறது.

**பாஷாபூஷணம்:**

1902ல் வெளியிடப் பெற்ற பாஷாபூஷணம் கவி தையின் அமைப்பையும் கையாளும் முறையையும் கூறும் ஒரு வழிகாட்டி நூல், பூஷணம் என்றால் அலங்காரம் அல்லது அணிமணி. அணியியல் என்பதற்குச் சம்ஸ்கிரு தச் சொல் அலங்கார சாஸ்த்ரம். பாஷா பூஷணத்தின் அறிமுகத்தில் ஆசிரியர் இந்நூல் தோன்றியதன் காரணத் தைக் குறிப்பிடுகிறார்.

மலையாளத்தில் கொடுக்கப்பட்ட அது பற்றிய பகு

திகள் இங்கே தரப்படுகின்றன.

"திருவனந்தபுரம் கல்லூரியில் இந்திய மொழிகளில் பயிற்றுவிக்கும் பொறுப்பு எனக்கு வழங்கப்பட்டபோது நான் அலங்கார சாஸ்த்திரம் பற்றிய நூல்கள் போதாமையின் நிலையை உயர்ந்தேன். சென்னைப் பல்கலைக் கழகத்தின் கேள்வித் தாள்கள் மாணவரிடமிருந்து ஓர் உயர்ந்த கல்வித்தரத்தை எதிர்நோக்கின ஆகவே பி.ஏ. வகுப்பு மாணவர்கள் அணியியலில் அடிப்படை அறிவாவது பெற்றிருக்க வேண்டும் என்று கருதப்பட்டது. தக்க பாடநூல்கள் மலையாளத்தில் இல்லாமையால், சம்ஸ்கிருத நூல்களின் துணைகொண்டு, அதனைக் கற்றுத்தரத் தொடங்கினேன். ஆனால் சிறிதுகாலத்திலேயே இம்முறை போதாது என்று கண்டேன்..... ஆகவே 1900, 1901 ஆகிய இரண்டாண்டுகள் நான் விரிவான பாடக் குறிப்புக்களையும் சம்ஸ்கிருதத்தில் உள்ள தரமிக்க நூல்களில் தேர்ந்து எடுக்கப்பட்ட சில பகுதிகளின் மொழி பெயர்ப்புக்களையும் த்யாரித்து வைத்தேன். பின்னர் இக்குறிப்புகள் திருத்தம் செய்யப்பட்டு, இலக்கிய விரும்பிகளான நண்பர்களும் மாணவர்களும் கேட்டுக் கொண்டபடி நூல் வடிவில் வெளியிடப்பட்டன".

ஆசிரியர், மேலும் கூறுகையில், அவர் இப்பாடப் பகுதி குறித்து சம்ஸ்கிருதத்திலிருந்த எல்லா நூல்களையும் படித்தறிந்ததாகவும் எந்த ஒரு தனி நூலையும் முழுக்கப் பின்பற்றி எழுதவில்லை என்றும் கூறுகிறார். மேற்கோள்களை எடுத்துக்காட்டும்போது நன்கு அறியப்பட்ட பழம் பெரும் இலக்கிய நூல்களிலிருந்தே எடுத்தாண்டுள்ளார். அத்தகைய மேற்கோள்கள்தேடும் முயற்சிக்கு வெற்றி கிட்டாதபோது அவர் தற்காலப் படைப்புகளிலிருந்து எடுத்துக்காட்டுகள் தந்துள்ளார். பல இடங்ளில் அவர் சொந்தமாகப் பாடல்கள் இயற்றி உள்ளார். அவரே இயற்றிய இடங்கள் குறிப்பாகச் சுட்டிக் காட்டப்பட்டுள்ளன.

அனைத்துமடங்கிய பெருநூலாக அதனை இயற்றிட இயலவில்லை என ஏ.ஆர். அவர்களே ஒப்புக்கொள்கி றார். இந்நூல் ஆறு பிரகரணங்களாகப்பிரித்து விளக்கப் பட்டுள்ளது.

அலங்கார

தோஷ

குண

சப்தார்த்த

த்வனி

குணபுட வ்யாங்க

அவர் அலங்காரங்களை ருத்ராத முறையைப் பின்பற்றி அதிசயம், சாம்யம், ஸ்லேஷம், வாஸ்தவம் என நான்காக அமைத்துள்ளார்.

மறு பதிப்பில் அந்நூலை இன்னும் விரிவுடையதாக வெளியிட முடியும் என ஆசிரியர் நம்பினார். 1910ல் ஓர் இரண்டாம் பதிப்பு வெளியிடப்பட்டது என்றாலும் அவ ருடைய அலுவல்கள் மிகவும் நெருக்கடியாக இருந்ததால் அவர் அவ்வாறு விரிவாகச் செய்ய இயலவில்லை. பாஷாபூஷணம் பற்றிக் கருத்துரைகளும் குறைகளும் பின்னாளைய அறிஞர்களால் குறிப்பாக இத்துறை பற்றி சாகித்ய பூஷணம் என்னும் நூலியற்றிய குட்டி கிருஷ்ண மாராரால் கூறப்பட்டன. ஆனால் என்.பி.எஸ். (தேசிய புத்தக அங்காடி) மூலம் வெளியிடப் பெற்று மாராரால் பதிப்பிக்கப்பெற்ற நூலுக்கு எழுதிய அறிமுகத்தில் மாரார் தம்பிரானின் அரும்பெரும் சாதனையைப் பாரா ட்டுகிறார்.

### விருத்தமஞ்சரி:

இதன் பெயர் சுட்டிக்காட்டுவது போல இது யாப்பு பற்றிய குறிப்புரையாகும். (வி ்த்தம் = செய்யுள் வகை)

பல்கலைக் கழக மாணவர்களுக்காகவும் இலக்கிய உத்திகள் மற்றும் செய்யுள் கலையில் திறம்பெறப்படிப்போருக்காகவும் இந்நூல் எழுதப்பட்டது. நாம் நன்கு அறிந்தபடி, மலையாளக்கவிஞர்கள், சம்ஸ்கிருத யாப்பு வடிவங்களையும் மலையாள நாட்டுக்குரிய வடிவங்களையும் தடையின்றிப் பயன்படுத்தி வந்தனர். சம்ஸ்கிருதச் செய்யுள் வடிவத்தைப் பொறுத்த வரையில் பலவகைகளைப் பற்றிய வரையறைகளுக்கும் எடுத்துக் காட்டுக்களுக்கும் குறைவே இல்லை. சந்த அசைகளை அடிப்படையாகக் கொண்ட யாப்பு வகைகளைப் பற்றி **விருத்தரத்னாகரமும்** மாத்திரை (காலஅளவு) களை அடிப்படையாகக் கொண்ட யாப்பு வகைகளைப் பற்றி **விருத்தரத்னாவளியும்** கூறியிருந்தன. வரையறைகளையும் எடுத்துக்காட்டுக்களையும் ஆசிரியர் வழங்கிய முறை மிகத்திறம்படைத்ததாயிருந்தது. பல இடங்களில் அவர் பரவலாக அறியப்பட்ட மலையாளக் கவிதைப் படைப்புக்களிலிருந்து எடுத்துக்காட்டுகள் தந்துள்ளார்.

மலையாள நாட்டுக்குரிய சொந்த யாப்பு முறைகளைப் பற்றிய எந்த வரையறைகளும் மலையாள மொழியில் இல்லை. ஆகவே இராஜராஜவர்மா இசைநயத்தைச் சார்ந்த சிறப்பான மலையாளச் செய்யுள்களுக்கு அளவுமுறை காண்பதற்குப் பெருமளவில் சொந்தமான ஆராய்ச்சித்தேடலில் ஈடுபடவேண்டியிருந்தது. சந்தேகமின்றி அது ஒரு மிகக் கடினமானதும் புதிரானதுமான துறைதான். முன்னோடியாக அவர் பாதைபோட்டுக் கணிசமான முன்னேற்றத்தையும் எட்டினார். ஆனால் இந்தச் சோதனையான, அலைக்கழிக்கும் ஆய்வுத்துறையில் இன்னும் அதிகம் பணி நிறைவேறாது நிற்கிறது என்பதை ஒத்துக்கொண்டுதான் ஆகவேண்டும். பின்னாளைய அறிஞர்கள் அப்பன் தம்புரான், குட்டி கிருஷ்ண மாரார், கே.கே. வாத்யார் போன்றோர் இத்துறையில் சில முயற்சிகள் செய்திருப்பினும் அவர்களுக்கு

ஓரளவு வெற்றியே கிடைத்தது. மலையாள யாப்பு முறை யைப் பொறுத்த வரையில் விருத்தமஞ்சரி ஒரு கலங் கரை விளக்கமாக நிற்கிறது.

### சாகித்ய சாஉற்யம்

1911ல் வெளியிடப் பெற்ற சாகித்ய சாஉற்யம் உரைநடை எழுதும் உத்திகள் குறித்த வழிகாட்டி நூலா கும். முன்னரே குறிப்பிட்டபடி மலையாள இலக்கியத்தில் காலவளர்ச்சியைப் பொறுத்த வரையில் கவிதைக்குப் பின்னரே உரைநடை மலர்ந்தது. குறிப்பாக மேலை நாட்டு இலக்கியங்களுடன் தொடர்பேற்பட்ட பின்னரே உரைநடை முகிழ்த்தது. உரைநடை கூட கம்பீரமும் அக நலங்களும் பெற சம்ஸ்கிருத மொழியைச் சார்ந்திருக்க வேண்டுமெனச் சில அறிஞர்கள் கருதிய போதிலும் இராஜராஜவர்மா அக்கருத்திலிருந்து மாறுபட்டார். சம்ஸ்கிருதத்தின் ஆட்சிப்பிடிப்பிலிருந்து உருவத்திலும் உள்ளடக்கத்திலும் விடுதலைபெற்று விளங்குவது தான் மலையாளத்திற்கு நல்லதென்றும், அதன் மூலம் ஆங்கி லத்திலிருந்தும் பிறமொழிகளிலிருந்தும் பல சிறப்புக் கூறுகளைப் பெற்றுப் பயனடையலாம் என்றும் அவர் கருதினார். எனினும் அவர் மொழியின் பேச்சுச் சந்தம் அதன் மொழித்தூய்மையைப் பேணிக்காக்கவேண்டு மென்றும் வெளியிலிருந்து வரும் செல்வாக்கால் பாதிக் கப்படக் கூடாதென்றும் கருதினார். இத்தகைய நோக்கத்துடன் அவர் பேரார்வம் பொங்க சாகித்ய சாஉற்யத்தை உருவாக்கினார். அதனை எழுதவும் தொகுத்து முடிக்கவும் ஐந்து மாதங்கள்தாம் ஆயின. அனால் அவர் தம் உடன்பணிபுரிவோரையும் அவரு டைய வழிகாட்டி அறிஞர் கேரளவர்மாவையும் இந்நூலின் எழுத்துப்படிகளை உருவாக்குகையில் கலந் தாலோசித்தார். இதன் கையெழுத்துப்படி கொச்சி நக ரைச் சேர்ந்த பேரறிஞர் அப்பன் தம்புரானிடம் பணிந்து முன் வைக்கப்பட்டது. அவர் மதிப்பு மிக்க முன்னுரை

யொன்றை அதற்கு வழங்கினார்.

அனைவரும் அறிந்ததுபோலவே, சம்ஸ்கிருதத்தில் கவிதை விஞ்சி நிற்கிறது. உரை நடைக்கு இரண்டாம் நிலையே உள்ளது. 19ம் நூற்றாண்டின் இடைக்காலம் வரை இந்திய மொழிகளிலும் அந்நிலையே நிலவிவந்தது. அப்போதுதான் இலக்கியக்காற்று திசைமாறி உரைநடைப்பக்கம் வீசியது. சிறந்த நெடுநோக்குள்ள இராஜராஜவர்மா போன்றோர் வட்டார மொழிகளில் உரைநடைக்கு, படைப்பிலக்கியமாக இருப்பினும், கருத்துத் தெரிவிக்கும் வகையாயிருப்பினும், ஒளிமயமான எதிர்காலமிருப்பதைக் கண்டறிந்தனர். அதனால் உரை நடைப் படைப்புகள் இவருடைய காலத்தில் திக்குத்திசையின்றிப் பலவகையாகப் பெருகிக்கொண்டிருந்தன. உரைநடையின் அமைப்பு செயற்கையாக, ஆடம்பரமாக, வளவளவென்றும் சுற்றிவளைத்தும் இருந்தது. இந்தச் சமயத்தில் வளரும் எழுத்தாளர்களுக்கு ஒருவகை வழி காட்டுதலை வழங்கவேண்டியது தேவை என்றுணர்ந்தார் இராஜராஜவர்மா. உரைநடையின் பண்புகள் எவை? உரைநடைப் படைப்புகளில் வழக்கமாகக் காணப்படும் குறைகள் எவை? படைப்பிலக்கியம், திறனாய்வு இரண்டுவகை உரைநடையிலும் அமையும் உரைநடை வகைகள் எவை? இந்தக் கேள்விகளுக்கு விடைகள் சாகித்ய சாஉற்யம் நூலில் முறையான அமைப்பில் கொடுக்கப்பட்டிருப்பதைக் காணலாம்.

நன்கறியப்பட்ட திறனாய்வாளர் குட்டிப்புழா கிருஷ்ணபிள்ளை [illegible]த்ய **சாஉற்யம்** (1969) என்.பி.எஸ் பதிப்புக்கு வழங்கிய நவீன முறை முன்னுரையில் இந்நூல் மலையாள மொழி கற்கும் மாணவர்களுக்கு மட்டுமின்றி உரைநடை எழுத்தாளர்களுக்கும் ஏன், திறம் படவும் இனிமைதவழவும் எழுதவிரும்பும் முதிர்ச்சி பெற்ற எழுத்தாளர்களுக்கும் கூட நிலைத்த பயன்தரத்தக்கது என்று கூறுகிறார். பிறர் ஏற்றுக்கொள்

ளக்கூடிய உரைநடையை எழுதுவது என்பதை கவிதை எழுதுவதையும் விட மிகக் கடினமானது, நல்ல உரை நடை நேரானதாகவும், சுருக்கமாகவும், வனப்பாகவும் மனத்தில் சிலீரென்று பதியும் வண்ணமும் இருக்க வேண்டும். செய்யுளின் கட்டுப்பாடுகளை மீறிய வெறும் சொற்களின் தொகுப்பு நல்ல உரைநடையாகாது. இலக் கியத் தரமிக்க நிலையைச் சுற்றும் எட்டாது.

நூலின் முதற்பகுதியில் ஏ.ஆர்.உரைநடையை நான்கு வகைகளாகப் பிரித்துள்ளார்.

ஆக்யானம் (காலத்தொடர்ச்சியில் தருதல்)

வர்ணனம் (வருணித்தல்)

விவரணம் (விளக்கமளித்தல்) மற்றும்

உப்பாதனம் (வாதம் செய்தல்)

ஒவ்வொரு வகையின் தனிச் சிறப்பும் திட்பமாக விளக்கப்பட்டுப் பொருத்தமான எடுத்துக்காட்டுகள் தரப்பட்டுள்ளன.

தூய்மையான சொல்வெளியீடு, மொழியின் மரபுத் தொடர்கள், பயன்பாட்டின் பொருத்தம், நிறுத்தற்குறி கள் ஆகியனபற்றி விளக்கும் இரண்டாம் பகுதி பயனும் சுவையும் உள்ளதாக விளங்குகிறது. இறுதியில் கொடுக் கப்பட்டுள்ள ஒரே பொருள்தரும் சொற்பட்டியல் நூலின் மதிப்பை உயர்த்துகிறது. ஃபௌலர் ஆங்கில மொழிக்குச் செய்த சேவையை ஏ.ஆர்.மலையாள மொழிக்கு இந்த மிக அரிய வழிகாட்டியின் மூலம் ஆற்றியுள்ளார்.

## பகுதி ஆறு

# மொழி பெயர்ப்புகள்

இராஜராஜவர்மா 56 ஆண்டுக்காலமே வாழ்ந்தார். இந்தக் காலப்பிரிவைச் சமமான இரண்டு காலகட்டங்களில் பிரித்துக் கொள்ளலாம். முதல் பகுதி பின் வாழ்க்கைக்கான உருவாக்கக் காலம். இரண்டாம் பகுதி கடுமையான அலுவற்பணிகள், இலக்கிய ஆக்கங்கள், குடும்பத்தேவைகளை நிறைவு செய்தல், சமுதாயத் தேவைகளை நிறைவுசெய்தல் ஆகியவை நெருக்கமாக இணைந்த காலகட்டமாகும். ஆகவே இவ்வளவு குறுகிய கால கட்டத்தில் இத்தனையையும் அவர் எவ்வாறு சாதித்தார் என்பது ஓர் புதிராகவே விளங்குகிறது. அலுவல் முறையிலும் குடும்பமுறையிலும் அவருக்கே உரிய சிக்கல்கள் இருந்தன. சிக்கல்கள் அலைக்கழிப்பாகவும் அறைகூவலாகவும் விளங்கியபோது அவர் இறுக்கத்தைத் தவிர்க்க எழுத்துப்படைப்பில் ஈடுபட்டார், அது போன்ற சூழ்நிலைகளில் மற்றவர்கள் எந்த ஓர் உருப்படியான பணியையும் செய்யக் கொஞ்சம்கூடத் தகுதியற்றவர்களாகிறார்கள். கணிசமான ஆராய்ச்சித்தேடல், ஆழ்ந்த சிந்தனை, விரிவானபடிப்பு ஆகியன கட்டாயமாகத் தேவைப்படுகிற ஆய்வுரைகளையும் விளக்கவுரைகளையும் எழுதுவதென்பது ஓர் கடுமையான மனச்சோர்வை உண்டாக்கும் பணி என்பதில் ஐயமில்லை. கடந்த பகுதியில் நாம் இராஜராஜவர்மா உருவாக்கி வெளியிட்ட படைப்புகளின் பலவகைத்தன்மை, என்ணிக்கை, உயர்பண்பு ஆகியவற்றைப் பார்த்தோம். அத்தகைய அழுத்தமான பணிச்சுமையின் கடுமைகளுக்கிடையே அவர் ஒருவகைப் புத்துணர்வூட்டும் ஓய்வை விரும்பினார். அவர்தேர்ந்தெடுத்த ஓய்வுமுறை, நேரத்தை வெறுமையாகக் கடத்துவதல்ல: ஆனால்

ஒப்பிட்டுப்பார்க்கையில் ஆராய்ச்சிகளைவிடச் சற்றே எளிதான இலக்கிய முயற்சியாகும். அதுதான் மொழிபெயர்ப்பு. அவர் சம்ஸ்கிருதத்திலிருந்து ஆறு பேரிலக்கியப் படைப்புக்களையும் ஆங்கிலத்திலிருந்து ஒன்றையும் மொழிபெயர்த்தார். படைப்புத்திறம் மிளிர்கிற இந்த அறிவு நலம்மிக்க ஆராய்ச்சியாளருக்கு மொழிபெயர்ப்பு என்பது மகிழ்ச்சியூட்டுகிற இலக்கியப் பொழுதுபோக்காக இருந்தது.

**மேக தூதம்:**

அவருடைய படைப்புப்பணிக் காலத்தின் தொடக்கத்தில் அவர் காளிதாசனின் மேகதூதத்தை மலையாளத்தில் செய்யுளாக மொழி பெயர்த்தார். 1894ல் நான்கு மாதங்களில் இந்தப்பணி நிறைவுபெற்றது, மலையாளச் செய்யுளில் அவருடைய முதல் பெரும்படைப்பு இது. இந்த மொழிபெயர்ப்பை அவர் மேற்கொள்ள முடிவு செய்ததற்கான சூழ்நிலைகள் முன்னுரையில் அவரால் சுட்டிக் காட்டப்பட்டுள்ளன. அவர் கேரள பாணினீயத்தை எழுதுவதில் ஆழ்ந்து ஒருமுகமாக ஈடுபட்டிருந்த போது ஒரு கட்டத்தில் அவர் மேகதூதம் போன்ற ஒரு பழங்காப்பியத்தை மலையாளத்தில் மொழிபெயர்ப்பது இரு மொழிகளின் வாக்கியத்தொடரமைப்புகளின் வேறுபாட்டை அறிய உதவுகிற, நல்ல அடையாளம் காட்டுகிற முயற்சி எனக் கருதினார்.

அவருடைய நாட்குறிப்பில் எழுதியுள்ள குறிப்புகள் அவர் ஒவ்வொரு நாளும் சில சுலோகங்களை மொழிபெயர்த்திருப்பது வழக்கம் எனக் காட்டுகின்றன. ஆசிரியர் ஹரிப்பாடு என்னும் ஊருக்கு நடைப்பயணமாகச் சென்றபோதுகூட சில சுலோகங்களை மொழிபெயர்ப்பது அவருக்கு மகிழ்வூட்டும் மாற்றமாக விளங்கியது. சமஸ்கிருதத்தில் புலமை இல்லாதவர்களும் படித்து மகிழும் விதத்தில் எளிய மலையாள நடையில்

செய்யுள்களை மொழிபெயர்க்க வேண்டுமென்பதில் இராஜராஜவர்மா கண்ணுங்கருத்துமாக இருந்தார். மூல நூலுக்கு முழுக்க அடியொற்றியிருக்கவேண்டும் என்பதில் அவர் அதே அளவு முனைப்பாக இருந்தார் ஆயினும் அவர் செய்யுள்களை அதே யாப்பு வடிவில் மொழிபெயர்த்தல் தேவை எனக் கருதவில்லை. மூலநூல் மந்தகிரந்த யாப்பு முறையில் இருந்தது. மொழிபெயர்ப்பு சர்தூலவிக்கிரிதிதம் முறையில் அமைந்தது. மலையாளத்தில் பெரும் செல்வாக்குப்பெற்றிருந்த இரண்டாம் அசை ஒன்றிவரும் எதுகை (துவியக்சர ப்ராசா) யையும் அவர் எல்லா இடங்களிலும் தொடர்ந்து பின்பற்றவில்லை. இத்தகைய கட்டுப்பாடுகள் தேவையற்றவை. குறிப்பாக மொழிபெயர்ப்புகளுக்குத் தேவையற்றவை என அவர் எண்ணினார். சம்ஸ்கிருதக் கதையை மலையாளச் செய்யுளில் மொழி பெயர்ப்பதில் இதுதான் அவரது முதல் முயற்சி என்றபோதிலும் இது பாராட்டத் தக்க வெற்றியாக அமைந்தது.

**குமாரசம்பவம்:**

மேகதூதத்தின் மொழிபெயர்ப்புக்கு இராஜ ராஜ வர்மா பெற்ற வரவேற்பு மிக மிக ஊக்கமளிக்கத்தக்கதாக இருந்ததால் குறுகிய காலத்திற்குள் அது போன்ற இன்னொரு முயற்சியை அவர் தொடங்கினார். 1894-ல் குமாரசம்பவத்தை ஒருமாணவருக்குக் கற்பிக்க வேண்டி அவர் அதற்காகச் சில குறிப்புகள் தயார் செய்திருந்தார். அதே நேரத்தில் அவர் அக்கவிதையை மொழி பெயர்ப்பதிலும் தம்மை ஈடுபடுத்திக்கொண்டார். மாணவனது தனிப்படிப்பு இடையில் நின்றபோதும்கூட, மொழிபெயர்ப்புத் தொடர்ந்தது. அந்த மொழி பெயர்ப்பு 1895ல் நிறைவுசெய்யப்பட்டு 1897-ல் வெளியிடப்பெற்றது.

எல்லாத்திறனாய்வாளர்களும், காளிதாசனின்

படைப்புத்தான் என ஒப்புக்கொள்ளும் முதல் எட்டுச் சருக்கங்களில் 6 சருக்கங்கள் மட்டுமே அவர் மொழி பெயர்த்தார். நான்காவது சருக்கமான 'ரதிப்ரலாப' அமைக்கப்பட்டது. எட்டாவது சருக்கம் அளவுக்கு மீறிய காமவருணனைச் சுவையுள்ளதால் விடப்பட்டது. மேகதூதத்தின் மொழிபெயர்ப்பை விட இம்மொழி பெயர்ப்பு மிகக் கவர்ச்சிகரமாக அமைந்துள்ளது. பல வகுப்புகளுக்குப் பாடநூலாக அங்கீகரிக்கப்பட்டு அத னால் பல பதிப்புகள் ஏற்கனவே வெளிவந்துவிட்டன. மரபுவிரும்பும் சில திறனாய்வாளர்களின் கருத்துப்படி இந்த இரு மொழி பெயர்ப்புகளிலும் பேச்சுவடிவச் சொற்கள் மிக விரவியுள்ளன. ஆனால் ஆசிரியர் அவ்வாறிருக்க வேண்டுமென ஆழ்ந்த கருத்துள்ளதால் தான் அவற்றைப் பயன்படுத்தியுள்ளார்

**சாகுந்தலம்:**

காளிதாசனின் சாகுந்தலத்தை மொழி பெயர்க்கும் பணி ஆசிரியரால் தனிச்சிறப்புமிக்க சூழ்நிலைகளில் மேற்கொள்ளப்பட்டது. காலங்காலமாக மலையாளக் கவிஞர்களையும் அறிஞர்களையும் இப்பெருங்காவியம் மயக்கமும் மலைப்பும் அடையச் செய்துள்ளது. கடந்த ஒரு நூறு ஆண்டுகளாகப் பன்னிரண்டுக்கு மேற்பட்ட கேரளக் கவிஞர்கள் அதனுடன் கடுமையாகப் போராடி அதற்கு இணையான ஒன்றினை உருவாக்க முயன்றனர். ஆனால் ஒவ்வொரு முயற்சியிலும் ஒருபகுதி வெற்றியே கிடைத்தது. மூலநூல் அந்த அளவுக்கு மேன்மை பெற்ற தாயிருந்தது. முதன்முதல் மொழிபெயர்ப்பு முயற்சி, வேறு யாருமல்ல, கேரளவர்மாவின் தகுதிமிக்க கரங்க ளால் மேற்கொள்ளப்பட்டது. 1882-ல் வெளியிடப்பெற்ற இம்மொழி பெயர்ப்பு மகத்தான வெற்றி எனப் புகழப் பட்டது. ஆனால் அலங்காரச் சொற்களும் சம்ஸ்கிருதச் சொற்கள் மற்றும் தொடர்களும் மிகவிரவிக்கலந்து உயர்மட்டத்தினர் மாத்திரமே விரும்பும் நூலாக அது

அமைந்தது. இந்தச் சாதனையின் திறத்தை ஒப்புக் கொள்ளும் அதே நேரத்தில் இராஜ ராஜவர்மா அந்நூலின் பல இடங்களில் மலையாள மொழியின் உயிரோட்டம் பாதிப்புக்குட்படுகின்றதெனக் கருதினார். ஆகவே அவருடைய மாமா அவரை ஒரு திருத்தப்பட்ட பதிப்பை உருவாக்குமாறு கூறினார். ஏ.ஆர். தம்முடைய கருத்துரைகளைக் கூறினார். ஆனால் நூலாசிரியர் அவற்றில் பலவற்றை ஒப்புக்கொள்ளமுடியவில்லை. இவ்வாறாக 1912-ல் மணிப்பிரவாள சாகுந்தலம் என்னும் தலைப்பில் ஒரு திருத்தப்பட்ட பதிப்பு கேரளவர்மா காப்பியத்தின் எளிமைப்படுத்தப்பட்ட வடிவமொன்று, குறைந்த கல்வித்திறம் உள்ள வாசகர்களும் பயன்பெறும்படி வெளியிடவேண்டுமென்று விரும்பினார். அவர் உடனே காப்பியத்தை மொழிபெயர்க்கத்தொடங்கினார். 1912-ல் மலையாள சாகுந்தலம் என்னும் தலைப்பில் நூல் வெளிவந்தது.

இந்த இரண்டு மொழிபெயர்ப்புகளையும் ஒப்பிட்டு மதிப்பிடுவது கடினமான செயல். ஒவ்வொன்றுக்கும் அதனதனுக்கேயுரிய குறைகளும் நிறைகளும் உண்டு. இரண்டும் சேர்ந்து சாகுந்தலம் என்னும் அரும்பெரும் நாடகத்தைச் சிறப்பாக நுணுகி அறியவும் நன்கு சுவைக்கவும் வழிசெய்தன. மூலநூலுக்கு கருத்து மாறுபடாது இருத்தல்பற்றிய இராஜராஜவர்மாவின் இலட்சியம், புறக்கூறுகளான யாப்பு வடிவம், சொல்லலங்காரம் ஆகியவற்றையே நோக்கமாகக்கொண்ட கேரளவர்மா போன்றவர்களிடமிருந்து மாறுபட்டிருந்தது. கற்பனைத்திறனும் உணர்ச்சிப்பாங்கும் (பாவம் bhava) பற்றியே ஏ.ஆர் மிகுதியாக அக்கறை கொண்டிருந்தார். மலையாளம் போன்ற வளர்ச்சிகுன்றிய மொழியில் இவற்றை முழுக்கக் கைக்கொள்வதற்கு வடிவம் பற்றிய கூறுகளான யாப்பு அடிவகை, எதுகை போன்ற வற்றில் அதிக உரிமை எடுத்துக்கொள்வது பொருத்தமென்று அவர்

கருதினார். சாகுந்தலம் போன்ற ஒரு பெருங்காவியம், சம்ஸ்கிருத மொழியின் மாபெரும் விரிவையும் வளமை யையும் உச்ச அளவுக்குப் பயன்படுத்திக்கொள்வதனால் தான் புதிய இந்திய மொழிகளின் எழுத்து வல்லுநர்கள் தம் மொழியில் அதன் துடிப்பைக் கொண்டு வருகையில் போராடநேர்வதைக் காண்கிறோம்.

**மாளவிகாக்னிமித்ரம்:**

சாகுந்தலம் மிகச் சிறந்த கவிதைமட்டுமன்று, மிகச் சிறந்த நாடகமும் கூட. 1882ல் முதன்முறையாக வெளிடப்பெற்ற கேரளவர்மாவின் அபிஞான சாகுந்த லம் சம்ஸ்கிருதம் இடையில் கலந்த மணிப்பிரவாள நடையில் எழுதப்பட்ட போதும், நாடகமேடையிலும் பெருமளவு வரவேற்பைப் பெற்றது. அது மற்ற சம்ஸ்கி ருத நாடகங்களை மலையாளத்தில் மொழியாக்கம் செய்வதைத் தொடங்கிவைத்தது. விரைவில் நாடகம் ஓர் அங்கீகரிக்கப்பட்ட இலக்கிய அங்கம் என்னும் நிலையை எய்தியது. இராஜராஜவர்மாவின் சாகுந்தல ஆக்கமும் நாடகமேடையிலும் வெளி உலகிலும் நல்ல வரவேற் பைப் பெற்றது. ஆகவே மற்ற சம்ஸ்கிருத நாடகங்களை மொழிபெயர்க்கும் ஊக்குவிப்பைப் பெற்றார். அடுத்த தாக அவர் தேர்ந்தெடுத்தது காளிதாசனின் மாளவிகா கினிமித்ரம் (1916). 1915ல் மாவேலிக்கராவில் அவருடைய சாகுந்தலம் நாடகம் நடத்தப்பட்டபோது அது மிகவும் பெரும் வெற்றியாக அமைந்தபோது அவர் ஒவ்வோராண்டும் ஒரு புதிய நாடகம் எழுதி வழங்குவ தாக உறுதியளித்தார்.

மாளவிகாக்னிமித்திரத்தின் முகவுரையில் அவர் கூறுகிறார். 'இலக்கணம் என்னும் நெருங்குவதற்கு அரிய, வழியற்ற வனத்தில் அலைந்து திரியும் என் மனத் திற்குச் சற்றுநேரம் நாடகம் என்னும் எழில்மிகு பூந்தோட் டத்தில் இளைப்பாறுவது எத்தகைய நிம்மதியைத்

தருகிறது! அந்த இன்பத்தைத் தேடும் பேராவலை அடக்கமுடியாமல் அந்த ஆவலின் விளைவால் வெற்றிகரமாகவோ அவ்வாறின்றியோ மாளவிகாக்னி மித்ரத்தை நான் மொழிபெயர்த்துள்ளேன்!.'

மாவேலிக்கராவிலிருந்தபோதே தொடங்கிய மொழிபெயர்ப்புப்பணி திருவனந்தபுரத்தில் பேரூக்கத்துடன் தொடரப்பட்டு இரண்டு மாதங்களில் நூல் நிறைவு பெற்றது. இவருடைய கல்விநிபுணத்துவம் வாய்ந்த நண்பர்கள் சில முதன்மையான சுலோகங்களின் மொழி பெயர்ப்பைக் கேட்டபின் அவற்றில் சில மூலநூலின் திறத்தையும் மிஞ்சுவதாயுள்ளன என்று பாராட்டுமளவுக்குச் சென்றனர். அவ்வாறு கூறுவது மிகையானது என்பதில் ஐயமில்லை. 1916ன் கோடைகாலத்தில் கலாவிலாசம் நாடகக்குழுவினரால் மாளவிகாக்னிமித்ரம் மேடையில் அரங்கேற்றப்பெற்று அது மிகச் சிறந்த வெற்றிபெற்றது.

***சாருதத்தம்:***

1917ன் கோடைகாலத்தில் திருவனந்தபுரத்தைச் சேர்ந்த அதே கலாவிலாசம் நாடகக் குழுவினர் தம்புரானிடமிருந்து ஒரு புதிய நாடகத்தை விரும்பினர். இந்த முறை அவர் அதிகச் செயல் நிகழ்வுகளும் மிகப்பலவிதமான புராணப் பாத்திரங்களும் கொண்ட நாடகத்தை வழங்கவிரும்பினார். இதற்காக முதலில் சூத்ரகரின் 'மிருச்சகடிகம்' ஆய்வுக்கு எடுத்துக்கொள்ளப் பட்டது. அனால் அதில் சில காட்சிகள் அளவுக்கு மீறிய நீளம் கொண்டவையாக இருந்தன. பாச கவியின் சாருதத்தமே தமக்கு உள் தூண்டுதலாக இருந்தது என சூத்ரகர் கூறியுள்ளபடியால் அதுவும் எடுத்துக்கொள்ளப் பட்டது. அவர் சாருதத்தத்தின் முதல் நான்கு அங்கங்களையும் மொழிபெயர்த்து மிருச்ச கடிகத்தின் பிற்பகுதியின் சுருக்கப்பட்ட வடிவத்தை நாடக முடிப்

பாக அத்துடன் இணைத்துத்தரலாமெனமுடிவு செய்தார். வழக்கம்போலவே அவர் கவிதைப்பகுதிகளை முதலிலும் உரைநடைப்பகுதிகளைப் பிறகும் மொழி பெயர்த்தார். பொறுப்பு முதல்வராக விளங்கியதால் அவருடைய பல்வகை அலுவல்கள் தொடக்கத்தில் சற்றே, தாமதத்தை ஏற்படுத்தினாலும் விரைவிலேயே அந்தப்பணி முழுமையான வேகத்தை எட்டியது. அவருடைய பேரார்வத்தையும் உணர்ச்சிப் பெருக்கையும் அவருடைய நாட்குறிப்பிலிருந்து அறிந்து கொள்ளலாம். 'விரைவிலேயே எழுந்து ஒரு பன்னிரண்டு செய்யுள்களைக் குளிக்கும் நேரத்திற்கு முன்பே மொழி பெயர்த்தேன், கவிதாதேவியை வருந்தி அழைத்து நல்ல உணர்வில் வைத்திருக்க வேண்டியதை முழுதுமாக உணர்ந்து, கல்லூரியில் வகுப்புகள் எடுப்பது தவிரப்பிற வற்றை ஒதுக்கிவைத்தேன். டென்னிஸ் களத்தில்கூட என்மனம் கவிதை உலகிலேயே அலைந்துதிரிந்தது. இரவிலே ஆழ்ந்த தூக்கம் இல்லை. ஆனால் பல கடினமான செய்யுள்கள் எளிதாக மொழிபெயர்க்கப்பட்டன.

'கவிதையின் கற்பனை உலகில் காலை முதல் வாழ்ந்திருந்தேன். சூத்திரகரின் செய்யுள்கள் பாச கவியின் இயற்கையான இனிமையையோ பிற்காலக்கவிஞர்களின் கலைநுணுக்க முழுநிறைவு மற்றும் முடிப்புநிலை மெருகையோ பெற்றிருக்கவில்லை. எனவே அவற்றை மலையாளத்தில் வார்த்தெடுக்கையில் செய்யுள்களை வளமூட்டுவதற்கு முழு வாய்ப்பிருந்தது.'

உண்மையில் இந்தப் பணி கடிகார இயக்கத்தைப் போல் நுண்மையுடன் வளர்ச்சிபெற்றது;மொழி பெயர்ப்பு, சரிபார்த்தல், அச்சுப்படிகளைத் திருத்தல் ஆகியன ஒரே நேரத்தில் ஒன்று மாற்றி ஒன்றாகச் செய்யப்பட்டு புத்தகம் ஒரு சாதனை என்னும்படியாக குறித்த நேரத்தில் வெளியிடப்பெற்றது. மொழிபெயர்ப்பாளர் மற்ற மொழிபெயர்ப்புக்களை விட இதில் அதிக

உரிமை எடுத்துக் கொண்டுள்ளார்.

**ஸ்வப்ன வாசவதத்தம்:**

ஒரு புதிய நாடகத்தை மொழிபெயர்ப்பதும் வெளியிடுவதும் ஆண்டு தோறும் நிகழும்நிகழ்ச்சியாகியது. 1918க்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட நாடகம் கவியின் ஸ்வப்ன வாசவதத்தம். நாடகம் வெற்றியுடன் அமைந்தது. ஆனால் மற்ற நாடகங்களைவிட இதில் நகைச்சுவை குறைவாக இருந்தது. கோமாளி நான்காம் அங்கத்தில் தான் முதல் முதலில் தோன்றுகிறான். எனவே நாடகச் சூழ்நிலை முழுவதுமாகப் பார்க்கையில் மகிழ்ச்சி குறைவாயிருந்தது.

சம்ஸ்கிருதத்திலிருந்து மொழிபெயர்க்கப்பட்ட இந்த நூல்கள் அனைத்துக்கும் பலமறுபதிப்புகள் வெளிவந்தன. அவை பலமுறை பள்ளிகளிலும் கல்லூரிகளிலும் பாடநூல்களாக வைக்கப்பட்டன. இன்றைய நாட்களிலும் கூட அவற்றின் பெருமை தொடர்கிறது. ஒரு சீரிய கலை வல்லுனரின் படைப்புகள் என்னும் முறையில் இவை பெரும் மரியாதையுடன் போற்றப்படுகின்றன.

**உத்தல சரிதம்:**

இப்போது நாம் முற்றிலும் மாறுபட்ட மற்றொரு வகை மொழிபெயர்ப்பைக் காண்போம். வேறான ஒரு மூலத்திலிருந்து சம்ஸ்கிருத உரைநடையில் இது மொழிபெயர்க்கப்பட்டது. மூலநூல் ஷேக்ஸ்பியரின் ஒத்தெல்லோ. இது இராஜராஜவர்மாவின் தொடக்கால ஆக்கங்களில் ஒன்று (1898). நுணுக்கமாகப் பார்த்ததால் இது ஒரு மொழிபெயர்ப்பு அல்ல, தழுவல் நூல் ஆகும். இச்செயலின் நோக்கம், ஷேக்ஸ்பியரை படித்து அறியாத சம்ஸ்கிருத வாசகர்களுக்கு, அந்த மாபெரும் கவிஞரின் படைப்புக்கற்பனைத் திறத்தின் சுவையைக் கோடிட்டுக்

காட்டுவதாகும். ஐரோப்பியப் பண்பாட்டில் அறிமுகமில்லாத வாசகர்கள் எரிச்சலடையாதிருக்கும்பொருட்டுப் பாத்திரங்களின் பெயர்களும் மாற்றப்பட்டுள்ளன. (ஒத்தெல்லோ-உத்தலா, டெஸ்டிமோனா-தோஷதமனா, முதலியன) முழு நாடகமும் சுருக்கி அமைக்கப்பட்டு எளிய சம்ஸ்கிருத உரைநடையில், லேம்ப் ஆங்கிலத்தில் எழுதிய டேல்ஸ் ப்ரம் ஷேக்ஸ்பியர் (ஷேக்ஸ்பியர் நாடகங்களின் கதைகள்)போல அமைக்கப்பட்டுள்ளது.

## பகுதி ஏழு

# படைப்பிலக்கியங்களும் திறனாய்வுகளும்.

கடந்த பகுதியில் இராஜராஜவர்மாவின் மொழி பெயர்ப்புகளைப் பார்த்தோம். மொழிபெயர்ப்பு என்பது, சாதாரணமாகப் பார்த்தால், ஒரு படைப்பைப் பொருள்மாறாமல் விசுவாசமாக மற்றொரு மொழியில் பெயர்த்துச் சொல்வதாகும். மூலநூல் கற்பனை கலந்த படைப்பிலக்கியமாகவோ அல்லது வெறும் கருத்துரையா கவோ இருக்கலாம். அது படைப்பிலக்கியமாயிருப்பின் ஒரு நல்ல மொழிபெயர்ப்பு ஒரு படி மேலே சென்று ஒருவகை 'மொழி ஆக்கம்' ஆகிடவேண்டியுள்ளது. ஏ.ஆர்.சம்ஸ்கிருதப் பேரிலக்கியங்களை அவ்வாறுதான் மொழி ஆக்கம் செய்தார். அதனால்தான் கவிதையை மொழிபெயர்ப்பது படைப்புத்திறம் பெற்றவர்களுக்கு மட்டுமே இயல்கிறது. அவ்வாறிருப்பினும் மொழியாக்கங் கள் கூட, மூலநூல்களைப்படைப்பதற்கு ஈடாகா. ஏனெ னில், மொழியாக்கத்துக்குத் தேவையான மன எழுச்சியைத் தூண்டிவிடுவதற்கு மூலநூலே நிலைக்கள மாக அமைகிறது. படைப்பிலக்கிய மூல நூல்களில் படைப்புச்சக்தி கட்டற்றதாய், உடனுக்குடன் பொங்குவ தாய் வழக்கமாகவே உச்சச்செறிவுள்ளதாய் இருக்க வேண்டும். இப்போது நாம் படைப்பிலக்கியக் கவிஞர் என்கிற வகையில் இராஜராஜவர்மாவின் பங்களிப்பை ஆய்வோம்.

### சம்ஸ்கிருதப் படைப்புகள்:

இராஜராஜவர்மா தம் எழுத்துப்பணியின் தொடக்க காலத்தில் சம்ஸ்கிருதக் கவிஞராகத் தொடங் கிப் பின்னர் முப்பத்தொன்றாம் வயதில் மலையாள மொழிக்கு மாறிக்கொண்டார் என ஏற்கெனவே நாம்

பார்த்தோம். அவர் சம்ஸ்கிருத மொழியில் 22 படைப்பு களை உருவாக்கினார். அவற்றில் பெரும்பாலானவை ஒப்புநோக்கிப்பார்க்கையில் அளவிற் சிறியவை. நாடக நூலான கைரவாணி விஜயத்தையும் ஒத்தெல்லோ நாட கத்தின் உரைநடைத் தழுவலையும் முன்னரே குறிப்பிட் டோம். 'ஆங்கில சாம்ராஜ்யம் மகாகாவியா' நுணுகிப்பார்க்கவேண்டிய பெருநூல் ஆகும். சோகம் நிறைந்த இரங்கற்பாக்களான 'பங்கவிலாபம்' 'பித்ருபிர லாபம்' ஆகிய இரண்டு சிறுநூல்களையும் பற்றியும் முன்பு குறிப்பிட்டோம். இவற்றுக்குப் பின் சில கவிதை கள் ஸ்தோத்ர (பக்திப்பாடல்கள்) மற்றும் பிரசஸ்தி (அரசர், பிரபுக்களைப் புகழ்பவை) ஆகிய இரண்டு வகை களில் வருகின்றன. இந்தப் படைப்புகளில் பெரும்பாலா னவை ஓர் ஆர்வம் ததும்பும் இளங்கவிஞரின் தொடக்க காலப்பயிற்சிகள் என்றே எடுத்துக் கொள்ள வேண்டும். அறிவுத்திறத்தையும் கதைத் திறத்தையும் அவை வெளிக் காட்டுகின்ற போதிலும், அவற்றைப் பக்குவப்பட்டு முதிர்ச்சி அடைந்து வருகிற கவிஞரின் படைப்புகள் என்றே கருத வேண்டும். சம்ஸ்கிருதப் படைப்புகளில் சிலவற்றைமட்டும் நாம் எடுத்துக்கொண்டு முழுக்க முழுக்கப் பழமைப் பண்பாட்டுவாதியாகப் பண்பட்ட ஒருவர் கற்பனை இலக்கியப் புரட்சிக்காரராக எவ்வாறு மாறினார் என்பதைப் தெரிந்து கொள்ள முயலலாம்.

**சாகித்ய குதூகலம்:**

இந்நூல், ஏ.ஆர். எழுதிய தொடக்க காலக் கவிதை களைக் கல்விமான் துரவூர் நாராயணசாஸ்திரிகள் தக்க குறிப்புகள் தந்து வெளியிட்ட கவிதைத் தொகுப்பாகும். இந்நூலில் சரஸ்வதிஸ்தவம் (1890) வீணாஷ்டகம் (1887) ராகமுத்ரசப்தகம் (1889) விமானாஷ்டகம் (1891), ஹிந்துபதவ்யுத்பத்தி(1890), பித்ரு பிரலாபம் (1892), மற்றும் தேவீதண்டகம் (1888) ஆகிய கவிதைகள்

அடங்கியுள்ளன. எல்லாக்கவிதைகளுமே ஆசிரியரின் செய்யுள் அமைப்புத்திறனைக் காட்டுகின்றன. ஆனால் கவிஞர் உள்ளூரின் கருத்துப்படி பித்ருபிரலாபம் எல்லா வகையிலும் எழில் நிறைந்த கவிதையாகும்.

## கைர்வாணி விஜயம்:

முன்னமே குறிப்பிடப்பட்டதுபோல இது செய்யுளி லமைந்த ஓரங்க நாடகம். தலைமைப் பாத்திரங்கள் கைர்வாணி (சம்ஸ்கிருதம்) மற்றும் ஹவுணி (ஆங்கிலம்). இப்பாடல், சம்ஸ்கிருத அறிஞர் புன்னசேரி நம்பி தாம் புதிப்பித்து வெளியிடும் இதழாகிய 'விஞ்ஞான சிந்தா மணி'யில் வெளியிடுவதற்காக வேண்டிக் கொண்டபடி எழுதப்பட்டது. நெருக்கடியான கோரிக்கையாக அமைந்து ஆறே நாட்களில் முடித்தளிக்கவேண்டியிருந் தது. 1889ல் திருவனந்தபுரத்தில் சம்ஸ்கிருதப்பாட சாலை அமைக்கப்பட்டபோது எழுதப்பட்ட இது அப்போது நிலவிய சூழ்நிலையை எதிரொலிக்கிறது.

## சம்ஸ்கிருதவித விபவரி:

இராஜராஜவர்மாவின் மிகச் சுவையான சம்ஸ்கிரு தக் கவிதைகளில் ஒன்றாகப் பெரும்பாலும் இதனைக் கருத இடமுள்ளது. இதன் பாடுபொருள், இரவின் நான்கு பிரிவுகளில் இராதாவும் மாதவனும் இணைவதா கும். இது நான்கு சருக்கங்களில் விவரிக்கப்படுகிறது. சொல்வளம், சொற்களையும் சொற்றொடர்களையும் தேர்ந்தெடுத்ததிறம் ஆகியவற்றில் ஏ.ஆர். மிக நுண்ணிய திறத்தையும் கலைநுட்பத்தையும் காட்டுகிறார். ஆங்கிலத் தில் மொழிபெயர்த்தால் மூலப்படைப்பின் பேரழகை எவ்வகையிலும் கொண்டுவர இயலாது என்பதால் அம்முயற்சி இவண் செய்யப்படவில்லை.

## ஆங்கில சாம்ராஜ்யம்.

இந்தமகாகாவிய அமைப்பில் எழுதப்பட்ட நீண்ட

கவிதை இராஜராஜவர்மாவின் கவிதைகளில் மிகச் சிறந் தது மட்டுமன்று, தற்காலக்கவிஞர்கள் எழுதிய சம்ஸ்கிரு தக் காவியங்கள் அனைத்திலும் தலைசிறந்ததாகும். ஆங்கில சாம்ராஜ்யம் என்பது பிரிட்டிஷ் பேரரசைக் குறிக்கிறது. இந்தக்கவிதை பேரரசின் வரலாற்றை அரசி விக்டோரியா ஆட்சியின் வைரவிழா வரை பாடுகிறது. வைரவிழா இந்தியாவில் 1895ல் எல்லா ஆடம்பரங்களு டன் கொண்டாடப்பட்டது. அந்த நிகழ்ச்சியின் பெரும் கொண்டாட்டங்களின்போது புகழ்பெற்ற மகாகாவிய மான ரகுவம்சத்தின் அடியொற்றி பிரிட்டிஷ் பேரரசைப் பற்றி ஒரு நீண்ட கவிதை எழுதுவது நல்ல ஒரு செயலென்று இராஜராஜவர்மா கருதினார். வைரவிழாக் கொண்டாட்டம்தான் இதன் உடனடித் தூண்டுதல் என்றாலும், பாடசாலைகளில் சம்ஸ்கிருதம் பயிலும் மாணவர்கள் வரலாறு, புவியியல் முதலியவற்றைக் கற்க வேண்டியிருப்பதால் அதற்குத்தக்க பாடநூல்கள் இல்லா மையின் பற்றாக்குறையைத் தணிக்க உண்மைவரலாற் றைப்பற்றிய நூல் கவிதை நடையிலிருந்தாலும் கூட உதவும் எனக்கருதினார். தம் வழிகாட்டி கேரள வர்மாவை இதுபற்றிச் கலந்தோலோசித்த போது அவ ரும் ஒப்புக்கொண்டபடியால் வைரவிழாக் கொண்டாட் டங்களுக்கு இரண்டு வாரங்கள் உள்ளபோது கவிதை இயற்றும் பணியைத் தொடங்கினார். 23 சருக்கங்களைக் கொண்ட இக்காவியம் இரண்டாண்டுகளுக்குச் சற்றே தாண்டி முடிக்கப்பட்டு 1900ல் வெளியிடப்பட்டது.

காவியம் லண்டன் மாநகரத்தின் மிக விரிவான வருணனையுடன் தொடங்குகிறது ஆசிரியர் நகரை நேரில் பார்த்திராவிட்டாலும், அந்நகரைப்பற்றி அவர் கேட்டவற்றையும் படித்தவற்றையும் வைத்துக்கற்பனை யைத் தட்டிவிட்டுள்ளார். அது அந்நகரைப்பற்றிய நிறை வான அழகான வருணனைகளாக அமைந்தது. பின் அது ஈஸ்ட் இந்தியாக் கம்பெனியின் சாகசச் செயல்கள்,

பின்னர் படிப்படியாக வரலாற்று முதன்மையான நிகழ்ச்சிகள் பற்றி வருணித்து பிரிட்டிஷ் மற்றும் இந்தியப் பெருமைக்குரியோர் அனைவரையும் பற்றிய செய்திகள், தகராறுகள், படையெடுப்புகள், போர்கள், சரணடைதல் அதற்குப் பின் ஓரளவு அமைதியாக ஆட்சி, அதன் விளைவாய் நவீன முன்னேற்றங்கள், இந்தியா ஒரு நாடாக வளர்தல் அனைத்தையும் கூறுகிறது. 11 ஆம் சருக்கத்தில் திப்புசுல்தானின் கேரளப் படையெடுப்பு முற்றுகை சிறப்பாக வருணிக்கப்படுகிறது.

இராஜராஜவர்மா வரலாற்று உண்மைகளை கீழ் வரும் நூல்களிலிருந்து எடுத்துக்கொண்டார் என அவர் நாட்குறிப்பிலிருந்து தெரியவருகிறது, ஹண்டரின் ஹிஸ்டரி ஆப் இந்தியா, தி ரெட்ராஸ்பெக்ட்ஸ் அன்ட் பிராஸ்பெக்ட்ஸ் ஆஃப் இன்டியன் பாலிடி, மெக்காலேயின் எஸ்ஸேஸ் ஆன் கிளைவ் அண்ட் வாரன்ஹேஸ்டிங்ஸ், ரிச்சர்ட் டெம்பிளின் பிக்சரஸ்க் இந்தியா மற்றும் மெக்கன்சியின் உறிஸ்டரிஆஃப் தி நைன்டீன்த் செஞ்சுரி. இதுவரலாற்றைப் பொறுத்தவரையில் ஆகும். வருணனைகள் உயிரோட்டத்துடனும் சுவை நிறைந்தும் இருக்க வேண்டும் என்பதில் ஆழ்ந்த அக்கறையுடன் இருந்தார். அவர் பயன்படுத்திய சில உவமைகள் நமக்குக் காளிதாசனை நினைவுபடுத்துகின்றன. சில அவரது சொந்த ஆக்கம் மற்றவை பிற சம்ஸ்கிருதக்காவியங்களின் தாக்கத்தைக் காட்டுகின்றன.

பொதுவாகச் சொன்னால் ஆங்கில சாம்ராஜ்யம் சம்ஸ்கிருதத்தில் இயற்றப்பட்ட ஒரு பெரும் கவிதை. ஏ. ஆரின் உடன்காலத்தவரும் நண்பருமாகிய மகாகவி கே.சி. கேசவ பிள்ளை அவர்களால் இது மலையாளத்தில் மொழிபெயர்க்கப்பட்டது. சம்ஸ்கிருதம், இந்திய மொழிகள், இந்தியப் பண்பாடு ஆகியவற்றின் புகழ் ஒளியை வியந்துபாடிய ஒரு தேசியகவிஞர் ஏன், இந்தி

யாவிற்கு விடுதலை அளிக்க மறுத்த ஒரு பேரரசின் ஒளிமயமான பகுதியைப் போற்றிப்பாராட்டும் ஒரு செயலை மேற் கொண்டார் என நவீன கால வாசகர்கள் வியப்படையலாம். நிலையை நன்கு புரிந்து கொள்ள, இந்த எண்ணம் முகிழ்த்த காலகட்டத்தையும், ஒருநூற்றாண்டுக்கு முன் படிப்பறிவுமிக்க இந்தியர்கள் பேரரசுகுறித்த எந்தவகை மன உணர்வுகள் கொண்டிருந் தார்கள் என்பதையும் நினைவிற்கொள்ளவேண்டும். இந்திய தேசியம் என்பதன் உணர்வுவேகம் இப்போது இருப்பதைப்போல அக்காலத்தில் முளைத்துக்கூட இருக் கவில்லை. எப்படியிருந்தபோதிலும் ஒரு பேரரசின் வர லாற்றைக் குறித்த ஒரு கவிதை எழுதியது அக்கவிஞரை அந்த வலுவாய்ந்த பேரரசின் கையாள் எனக் குற்றஞ் சாட்டப் போதிய இடம் தரவில்லை.

## மலையாளத்தில் இயற்றிய கவிதைகள்:

ஆசிரியரின்மலையாளக் கவிதைக் கொடை பெரு மளவு எனக் கருதுவதற்கில்லை. குறிப்பிடத்தக்கவை இரண்டு கவிதைகளே. இவை இரண்டும் அளவிற்பெரி யவை அல்ல எனினும் சிறப்புமிக்கவை. கவிஞரின் ஆளு மைப் பண்பின் முழுக்க முழுக்க வேறுபட்ட இருவேறு முகப்புகளை இக்கவிதைகள் வெளிப்படுத்திக் காட்டு கின்றன.

## மலைய விலாசம்:

1895ல் இயற்றப்பட்ட மலைய விலாசம் மேற்குத் தொடர்ச்சி மலை பற்றி எழுதிய தன்னுணர்ச்சிப் பாடல் ஆகும். சென்னையிலிருந்து 1895ம் ஆண்டு புகைவண்டி யில் பாதிவழியும் சாலைவழியாகப் பாதியுமாகத் திரும்பி வந்த பயணத்தின்போது மேற்குத் தொடர்ச்சி மலையின் பேரழகு அவரை மயக்கி அயர வைத்தது. வள்ளியூரிலி ருந்து ஆரல்வாய்மொழிக்கு அஞ்சல்வண்டியில் பயணம் செய்யும் எந்த ஒரு பயணியையும் கவர்கிற மேற்குத்தொ

டர்ச்சி மலையின் பலவகை விரிவான எழிற்காட்சி கவி ஞரை மனங்கனியச்செய்யவே, அக்காட்சியைக் கற்ப னைச் சுவையுள்ள கவிதையில் வருணிக்கும் ஆவலை அவர் தவிர்க்க முடியவில்லை. 24 செய்யுள்கள் அமைந்த இந்தக்கவிதை இலக்கியக் கலைநுட்ப ரசிகர்களால் வர வேற்கப்பெற்றது. *தன்னுணர்ச்சி பொங்கிடும் கவிதைப் பாங்கு அன்று மலையாளத்திற்கு அறிமுகமில்லை. ஆகவே மலையவிலாசம் வழங்கிய புதுமை மணம் அனை வராலும் வரவேற்கப்பட்டது. இந்தச்சிறிய கவிதை மலை யாள மொழியில் ஒரு புதிய இலக்கியவடிவம் தோன்றி வளரும் வாய்ப்புகளை உருவாக்கியது. அதுவே இதன் தனிச்சிறப்பு

**பிரசாத மாலா:**

மலைய விலாசத்துக்குப் பின்னரும் செய்யுள் இயற் றுவது தொடர்ந்தாலும் அதுபெரும்பாலும் மொழி பெயர்ப்புக்காகவே இருந்தது. மலையாளத்தில் இயற்றப்பெற்ற அடுத்த மூலக்கவிதை 1918ல் ஆசிரியர் இயற்கை எய்துவதற்குச் சிலகாலம் முன்னர் இயற்றப்பட் டது. ஆட்சி புரிந்துவந்த மன்னர் ஸ்ரீமூலம்திருநாள் அவர் களின் அறுபதாண்டு நிறைவு 1918ல் கொண்டாடப்பட்டது. அந்த நிகழ்ச்சியை ஏ.ஆர். தமக் குப் பேருதவிபுரிந்து வரும் வள்ளல் ஆகிய அவருக்குக் கவிதையில் புகழுரைகள் காணிக்கையாக்கப்பயன்படுத் திக் கொண்டார். கணிசமான அளவு நீண்ட இந்தக்க விதை மன்னர், பிரபுக்களை வழக்கப்படி புகழும் பிரசஸ்தி வகை என்னும் அளவில் நிற்கவில்லை. பற்பல கடவுளருக்குவேண்டுதல்களைப் பின்னிப்பிணைத்து அமைத்த அறிவு நுட்பம் வாய்ந்த கவிதையாகும். ரிக்வே தத்தை முழுமையாக ஆழ்ந்து படித்தபின்னரே இக்க விதை இயற்றப்பட்டிருக்கவேண்டும் என எட்டு மந்திரங்கள் பகுதி புலப்படுத்துகின்றது. இந்துக்களின்

பலவகைக் கடவுளரைப் பாடியபின் கவிஞர் புத்தர், ஜீனர், கிறிஸ்து, முகம்மது ஆகியோரின் அருள்வேண்டு கிறார். இது ஒரு விதத்தில் கவிஞரின் மதபேதமற்ற அனைத்துயிரையும் அரவணைக்கும் பாங்கையும் அவரு டைய ஆன்மீகம் மற்றும் தத்துவம் சார்ந்த மனப்பாங்கை யும் சுட்டிக்காட்டுகிறது.

**உரைநடைப் படைப்புகள்:**

இராஜராஜவர்மா, சந்தேகமற்றமுறையில், கவி தைத்திறம் வாய்ந்தவர் என்பதைக் கண்டோம்: ஆயினும் அவருடைய அறிவுப்புலத்தின் முழுமை மலர்ச்சி அவரு டைய உரைநடைநூல்களில் காணப்படுகிறது. அவர் ஓர் நவீன உரைநடை வல்லாளர். தற்கால உரைநடையின் மாதிரியை உருவாக்கி பிறரும் பின்பற்ற வழிசெய்தவர். கருத்துரைநடை, விளக்கவுரைநடை, திறனாய்வு உரை நடை படைப்பிலக்கிய உரைநடை எனப்பலவகை உரை நடையையும் அவர் எழுதினார். அவருடைய உரைநடைப்படைப்புகளுள் மிகப்பெரும் பகுதி இலக்க ணம் மற்றும் ஆராய்ச்சியியல் என்பதால் இயற்கையான வழிமுறையில் அந்த உரைநடை வறட்சியாகவும் அலங் காரமற்றும் இருந்தது. அந்த இடத்திலும் கூட இராஜ ராஜவர்மா வேறுபட்டு விளங்கினார். கடினமான மொழி நூல் மற்றும் தத்துவச் சிக்கல்கள் வருகிறபோது அவற்றை தம்வாழ்வில் அறிந்த உவமைகளாலும் தொடர்பான சுவையான நிகழ்ச்சிகளாலும் விளக்கு வார். அவர் எழுதும் உரைநடையில் ஒரு சிறப்பான தகதகப்பு மின்னிடும். அத்தகைய அறிவியல் சார்ந்த பொருள்களைப் பற்றி எழுதும்போது அதேபோல எழுத முயல்வோர் அதனை எழுதுவது சிரமம் என உணர்கின் றனர். கேரளபாணினீயத்தின் திருத்தப்பட்ட பதிப்புக்கு இவர் எழுதிய நீண்ட அறிமுக உரை இவரது சிறப்பான அறிவு நுட்பத்திற்கு ஒரு செம்மையான எடுத்துக்காட்டு ஆகும்.

இந்தப் பகுதியில் நாம் அவரது கட்டுரைகளையும் இலக்கியத் திறனாய்வுகளையும் பற்றி முழுக்கவனம் செலுத்துவோம். அளவில் அதிகமில்லையென்றாலும், தரத்தில் உச்ச நிலையில் உள்ளவை அவை. அவருடைய உரைநடைப்படைப்புக்கள் சொல்லடக்கம், கூர்மை, கருத்துக்களின் காரணகாரியமுறைவைப்பு, தெளிவு, வெளிப்பாட்டின் அழகு ஆகிய பண்புகளுக்காகக் குறிப் பிட்டு மதிக்கப்பெறுபவை.

## இலக்கியத் திறனாய்வு:

இராஜராஜவர்மாவின் காலத்தில், மலையாளத்தில் இலக்கியத் திறனாய்வு அதன் குழந்தைப்பருவத்திலிருந் தது. அறிவாளிகள் கூடப்பாரம்பரிய முறையில் பகுத்த றிதல், செய்யுளின் புற அமைப்பை மதிப்பிடல், உரைஎழுதல், விளக்கம் கூறல் ஆகியவற்றை மட்டுமே பழகி அறிந்திருந்தனர். மேலைநாட்டு இலக்கியத்தின் தாக்கத்தின் காரணமாகவே இலக்கியப்படைப்புகளின் உட்பொருட்சிறப்பை ஆய்ந்து வெளிக்காட்டும் எண்ண அலை எழுந்தது.

## நளசரிதம்புதிய பதிப்பு:

நன்கறியப்பட்ட கதகளிப் பேரிலக்கியமான உண்ணாயிவாரியாரின் நள சரிதத்துக்கு (1905) இராஜ ராஜவர்மா எழுதிய இலக்கியநயவுரை அந்தக் காலத்தில் இலக்கியக் கலைநுட்பர்களின் கண்களைத் திறந்தது. அவர், ஓர் பழைய பெரும் படைப்பு நவீன காலத்திறனாய்வு மதிப்பீட்டுக்கு எவ்வாறு உட்படுத்தப் படவேண்டுமென்று அதில் காட்டியிருந்தார். நளசரிதம் ஆட்டக்கதா மிகக்கடினமான படைப்பாகும். அக்கறை யற்ற அச்சடிப்பு அதை மேலும் கடுமையாக்கி இருந்தது. ஆகவே இராஜராஜவர்மா நன்கு தோன்றுகிற தவறுக ளைச் சரியாக்கவும் ஓர் பொருளுரை எழுதவும் கடின மான பகுதிகளுக்கு விளக்கக்குறிப்புகள் எழுதவும் முடிவு

செய்தார். அவ்வாறு தயாரிக்கப்பட்ட பதிப்பு ஓர் அறிவுத்திறம் வாய்ந்த, புத்தொளிகாட்டக்கூடிய அறிமுக உரையுடன் வெளிவந்தது. அந்த அறிமுக உரை இன்றளவுக்கும் இலக்கிய நலம் பாராட்டலுக்கு மேன்மையான எடுத்துக்காட்டாக விளங்கிவருகிறது. உரைநூல் காந்தாரதாரகம், (அடர்ந்த வனத்தில் ஒருவிண்மீன்) எனப் பெயர் பெற்றது. இவ்வுரைநூலில் ஓர் சார்பற்ற திறனாய்வாளரும் பண்பாடுமிக்க சஹ்ரிதயருமான (நூலாசிரியரின் உளப்பாங்கை ஏற்றுக்கொண்ட உள்ளத்தினர்) ஒருவர் செம்மைமிக்க பெரும்படைப்பின் அகத்தே ஒளிரும் இனிமையை ஆராய்ந்து விளக்கிச் சொல்வதைக் காண்கிறோம்.

## பிற பெருநூல்களுக்கான முன்னுரைகள்:

நாம் முன்னரே பார்த்ததுபோல கேரளவர்மாவின் சாகுந்தல மொழி பெயர்ப்பின் திருத்தப்பட்ட பதிப்பு 1911ல் வெளியிடப்பெற்றது. இதற்காக இராஜராஜவர்மா எழுதிய முகவுரை 'நவரசங்களைப்பற்றிய ஆழ்ந்த பொருள் பொதிந்த ஆராய்ச்சியை உட்கொண்டிருந்தது. தூதுகவிதை இலக்கிய வடிவத்தில் புதுமைமிக்கது என ஏற்றுக்கொள்ளப்பட்ட கேரளவர்மாவின் மயூரசந்தேசத்துக்கு ஓர் மனக்கிளர்ச்சியூட்டும் அறிமுக உரையை இராஜராஜவர்மா எழுதினார். ஒரு நெருக்கமான உறவினர் என்னும் அளவில் ஓரளவுக்கு உறவுச் சார்பு இருக்கலாம் என எடுத்துக்கொண்டாலும் கூட, அந்த முன்னுரை சந்தேகத்துக்கு இடமின்றிப் பெரு–மதிப்புமிக்க ஒரு திறனாய்வு மதிப்பீடாகும்.

## நளினியைப் போற்றுதல்:

குமரன் ஆசானின் நளினிக்கு ஏ.ஆர். எழுதிய முன்னுரைக்கு நாம் வரும்போது அது மலையாளக் கவிதை வரலாற்றில் ஒரு புதிய அத்தியாயத்தைத் தொடங்கி வைக்கிறது என்பதை அறிய வேண்டும். கும

ரன் ஆசான் தற்போது நவீன தற்கால மலையாளக் கவிதை உலகின் தலைசிறந்த ஒரு மலையாளக் கவிஞ ராக அங்கீகரிக்கப்பட்டிருக்கிறார். ஆனால். அவருடைய காதற்கவிதை நளினி (1912)க்கு இராஜராஜவர்மா அறி முக உரை வழங்கியபோது அவரைச் சிலருக்கே தெரியும். ஒரு வீண பூவு (ஒரு வீழ்ந்த பூ, 1907) வெளியிடப்பெற்று அவரை கவனத்திற்குரியவர் ஆக்கியிருந்தது. எனினும் அது கொஞ்சம்கூடப் போதுமானதல்ல. குறிப்பாக அவர் பிற்படுத்தப்பட்ட இனமான ஈழவர் குலத்தைச்சார்ந்தவர். ஆதலால் உயர்சாதிக் கவிஞர்களும் அறிவாளிகளும் அத்தகைய எழுத்தாளர்களைப் பாராட்டுவதைத் தவிர் த்தனர்.

நளினியில் ஒரு புதிய ஒளிவீச்சைப் பளீரெனத் தேடிக்கண்டுபிடித்ததற்கும் உலகறியத் தெளிவாக, அக்கவிதை ஒரு புதிய பாதையின் ஒளிக்கதிர் என அறிவிக்கத் துணிந்ததற்கும் பெருமை இராஜராஜவர்மா வையே சாரும். ஒரேவகைப்பழமைப் போக்கிலிருந்து திசைமாற்றம் உருவாகி மிளிர்வதை ஏ.ஆர். வெளிச்சமிட் டுக் காட்டினார். குமரன் ஆசான் ஓர் அரும்பெரும் கவிஞராக வளர இருப்பதை அடையாளம் கண்டார். நளினி தனிச்சிறப்பு வாய்ந்த புனைவியல் கவிதை என்றும் அது போன்ற ஒன்றுக்காகத்தான் மலையாள இலக்கியம் நெடுங்காலமாகக் காத்துக் கொண்டிருந்த தென்றும் உறுதிபட மொழிந்தார். குமரன் ஆசானுக்கு எத்தகைய ஊக்குவிப்பு அது! எதிர்கால வரலாறு ஐயத் துக்கிடமின்றி இராஜராஜவர்மா கூறியது எவ்வளவு உண்மையென்று மெய்ப்பித்துவிட்டது. இன்று எல்லோ ரும் ஏ.ஆரை அவரது ஆழ்ந்த நுண்ணோக்கு, நவீனக் கண்ணோட்டம் மற்றும் தொலைநோக்கும் உணர்வு இவற்றுக்காக வியந்து பாராட்டுகின்றனர். அனால் அந்த நாட்களில் உயர்நிலையிலிருந்த கவிஞர்களும் அறிவாளி களும் ஏ.ஆர். கவனத்தெளிவில் குறைபட்டிருந்ததாய்க்

கருதினர்.

**மற்ற முன்னுரைகள்:**

புகழ்பெற்ற கவிஞர் மற்றும் நாடக ஆசிரியரான வி. கிருஷ்ணன் தம்பி, இராஜராஜவர்மாவின் தலை சிறந்த மாணாக்கர்களுள் ஒருவர். அவருடைய கபால குண்டலா (1914) நாவல் பெருமளவுக்கு அவரது மூலப் படைப்பே ஆயினும் எழுதுவதற்கான மனத்தூண்டல் அப் பெயருள்ள பங்கிம் சந்திரரின் நாவலிருந்து வந்தது. அந்த நாவலுக்கு இராஜராஜவர்மா ஓர் புத்தொளியூட்டும் முன்னுரை வழங்கினார். அவர் வழங்கிய மற்றொரு முன்னுரை கே. இராமகுருப்பின் சௌதாமினி (1914) நாவலுக்கு அகும். இம்முன்னுரையும் சுவை நிரம்பியதாகவும் அறிவூட்டுவதாகவும் விளங்கியது.

**கட்டுரைகள்:**

இராஜராஜவர்மாவுக்கு ஒரு பித்தாகவே விளங்கிய சோதிடத்தில் அவர் விரிந்தும் ஆழ்ந்தும் ஆய்வுகள் செய்திருந்தார். 'தி அஸ்ட்ராலஜி ஆப் கேரளா (கேரள சோதிடம்) மற்றும் பஞ்சாங்க சத்தி பத்ததி ஆகியவை பற்றி அறிவுத் திறமிக்க ஓர் ஆய்வுரை எழுதியிருந்தார். குஞ்ஞிகுட்டன் தம்புரான் மொழி பெயர்த்த மகாபாரதத்தை நலம்பாராட்டி ஒரு கட்டுரை வழங்கினார். பள்ளி உரைநடைநூல்களிலும் கல்லூரிப்பாட நூல்களிலும் சேர்க்கத்தக்கபடி சில கட்டுரைகளை எழுதினார். இவை உரைநடைக்கட்டுரைகள் மலையாளத்தில் எழுதுவதற்கான வடிவ அமைப்பை உருவாக்க உதவின.

## பகுதி எட்டு.

# இலக்கிய மறுமலர்ச்சியின் முன்னோடி

இல்க்கிய உலகில் இராஜராஜவர்மா ஆற்றிய சாத னைகளைத் துண்டு துண்டாகப் பல பகுதிகளில் நாம் பார்த்தோம். இந்தப் பகுதியில் நாம் அவற்றை ஒன்றாகக் கோர்த்து ஒரு முழுமையான அனைத்தும் ஒன்றி நிலவும் எழிற் காட்சியாக வழங்குவோம். அவருக்குப் பலநிகழ்ச் சிகள் நெருக்கமாக அமைந்த வாழ்க்கை அமைந்தது. குறிப்பாக அவர்தம் வாழ்வின் இரண்டாம் பகுதியில் ஆசிரியராகவும் சம்ஸ்கிருதம் மற்றும் இந்திய மொழிக ளில் கல்விப் பயிற்சித் திட்டங்களை அமைப்பவராகவும் பணிபுரிந்ததோடல்லாமல் தம் ஆர்வத்தால் தேர்ந்தெடுத் துக்கொண்ட பணிகளில் ஆய்வாளர், திட்ட வல்லுனர், கவிஞர், இலக்கணவாதி, மற்றும் திறனாய்வாளர் எனப் பல கோணங்களில் பரிணமித்தார். அறிவுத் தேடல் அவ ரது இயற்கை மனப்பாங்காய் உடன் வந்தது. பொதுவாக ஒருவரிடத்தில் ஒன்றுபட்டு அமையாத பல பண்புகளின் விசித்திரமான கலவையாக அவர் விளங்கினார். பெரிய அறிவாளிகளும் ஆய்வாளர்களுமான பலர் படைப்பாற் றல் சிறிதளவும் பெற்றிராதவர்களாக விளங்கியுள்ளனர். அதேபோல பல படைப்புத் திறனாளிகள் பரந்த கல்வி யறிவு பெறுவதற்கான கடும் உழைப்பை வெறுத்தொதுக் கியதையும் நாம் அறிவோம். தங்களுடைய ஆர்வம் செல்லும் துறைகளில் பலமணி நேரம் தொடர்ந்து பாடு படும் பலர் மனமகிழ்வூட்டும் செயல்களிலும் வேடிக்கை விளையாட்டுகளிலும் ஈடுபட இயலாதவர்களாகவோ, அவற்றை அலட்சியப்படுத்துபவர்களாகவோ இருப்பதை யும் அறிவோம்.ஆனால் இங்கே ஒரு மனிதர் மெய்யான

ஆய்வாளர் கவிஞர் மற்றும் ரசிகராகக் கடுமையாக உழைத்து வாழ்க்கையையும் சுவைத்ததைக் காண்கிறோம்.

அவருடைய இலக்கிய வெளியீடுகள் சுட்டிக்காட்டு வது போல, அவருடைய ஆளுமையில் ஓர் இரட்டை அமைப்புத் தோன்றுகிறது. இராஜராஜவர்மா, பாரம்பரி யக் கல்விமுறையில், திறமிக்க அறிவாளியும் கவிஞரு மான கேரளவர்மாவின் நேரடி மேற்பார்வையில் வளர்க்கப்பெற்றார். அவருடைய தொடக்க காலச் செய்யுள்கள் எல்லாம் சம்ஸ்கிருதத்திலேயே இருந்தன. அந்தக் காலச் செய்யுள்கள் எல்லாம் சம்ஸ்கிருதத்தி லேயே இருந்தன. அந்தக் கால கட்டத்தில் பெரும் வளர்ச்சி அடைந்திராத தம் தாய்மொழியாகிய மலையாளத்தில் கவிதைகள் இயற்றுவது தகுதிக்குக் குறைவு என்று அவர் கருதியிருக்கலாம். அவர் சம்ஸ்கி ருதப் படைப்பு முயற்சிகளில் மூழ்கித்திளைத்து, அந்த இலக்கியத்தின் பெரும் படைப்பாளிகளை அடியொற்றிப் பின்பற்ற முயன்றார். சில ஆண்டுகளுக்குப் பின்னர் அதே இராஜராஜவர்மா சம்ஸ்கிருதக் கூட்டுச் சொற்கள் மற்றும் சொல்லாட்சியைத் தவிர்த்து ஒதுக்கி எளிய மலையாளத்தின் சார்பில் வாதாடுவதைக் காண்கிறோம். அளவுக்குமிஞ்சிய அலங்காரங்களுடன் இருந்த கேரளவர் மாவின் சாகுந்தல மொழிபெயர்ப்பைத் திருத்தி அமைக் குமாறு அவரை ஒப்புக்கொள்ள வைப்பதில் அவர் பெற்ற வெற்றியையும் காண்கிறோம். இராஜராஜவர்மா எளிய மலையாளத்தில் கவிதைகள் இயற்றுவதையும் மொழிபெயர்ப்பதையும் செய்ததேயன்றி அந்த நாட்க ளில் படைப்புத் திறம் குறைந்த எழுத்தாளர்களுடைய களம் எனக்கருதப்பட்ட மலையாள உரைநடைக்கும் தன் பணியைத் திருப்பினார். அவ்வப்போது கேரளவர்மாவும் கூட உரைநடை எழுதியதுண்டு. ஆனால் அது நாம் அவரது 'அக்பர்' நாவலில் காண்பது போல உயர் கடின நிலையும் பகட்டும் மிளிர்வதாயிருந்தது. அவர் பள்ளி

மாணவர்களுக்காக எழுதியபோது சற்றே எளிய உரைநடையைக் கையாண்டார் எனினும் அது அவர் தன்னிலையிலிருந்து இறங்கி முயன்ற நிலையே ஆகும்.

இராஜராஜவர்மாவைப் பொறுத்த வரையில் அது அவ்வாறல்ல. இவர் கட்டாயமாகத் தேவைப்படும் இடங்களில் மட்டுமே சம்ஸ்கிருதச்சொற்கள் மற்றும் தொடர்களைப் பயன்படுத்தி, எளிய நேரடியான மலையாளத்திற்கு முன்னுரிமை அளித்தார். உரைநடைப் படைப்புகளிலேயே முழுக்க ஆழ்நது ஈடுபட்டிருந்தமையால் கவிதை எழுதுவது ஒரு பொழுதுபோக்காகவும் மனமகிழ்வு தரும் செயலாகவும் கருதப்பட்டது. அவர் உள்ளத்தில் நிலைகொண்டிருந்த அறிவியலாளர் மற்றும் திறனாய்வாளர் என்னும் மனப்பாங்குகள் கவிஞர் என்னும் பாங்கினை ஓரத்தில் தள்ளிவிட்டன. பழமையான வடிவமைப்பில் அலங்காரச் சொல்லாட்சியுடன் விளங்கிய அவரது தொடக்க காலச் சம்ஸ்கிருதப் படைப்புகளிலிருந்து அவருடைய குமாரசம்பவம் மற்றும் சாகுந்தலமொழிபெயர்ப்புகளுக்கு வரும்போது அவற்றின் சுவையில் ஒரு பெரும் மாறுதலை நாம் காண்கிறோம். அவருடைய உரைநடைப்படைப்புகளான நளசரிதம் திறனாய்வுப்பதிப்பு மற்றும் சாகித்ய சாஹ்யம், அவருடைய ஆளுமையிலும் இலக்கிய அணுகுமுறையிலும் ஏற்பட்ட புரட்சிகர மாற்றத்தைக் காட்டுகிறது. இரண்டு இராஜராஜவர்மாக்களைக் காண்கிறோம். தொடக்க காலத்தில் மரபுவாதியாக இருந்து பின்னாளில் நவீன வாதியாக மாறுகிறார். எப்பொழுது எவ்வாறு இந்த மறு பிறவி தோன்றியது? இதற்கான விடையைத் தருவது கடினம். ஒரேநேரத்திலே இது வளர்ச்சியும் புரட்சியும் ஆகும். பொதுவாகச் சொன்னால் முன்னைய இராஜராஜவர்மாவுக்கும் பின்னைய இராஜராஜவர்மாவுக்கும் உள்ள வேறுபாடு 19 மற்றும் 20ம் நூற்றாண்டுகளுக்குள் ஏற்பட்ட வேறுபாடு ஆகும். இலக்கியப்

படைப்புகளை ஆராய்ந்து பார்க்கும்போது ஒரு குறிப் பிட்ட அணுகுமுறை மாற்றத்தை 1900ம் ஆண்டு அள வில் காணமுடிகிறது என்று கூறுவது பொருத்தமாகவே தோன்றுகிறது.

**இலக்கிய மறுமலர்ச்சி:**

இந்த மாற்றத்தை நாம் அரசியல் சமுதாய மாற்றங் களின் பின்னணியில் நன்கு புரிந்துகொள்ளலாம். ஒரு தனிமனிதர், அவர் எவ்வளவு பெருமையும் மேன்மையும் படைத்திருந்தாலும் அவரைச்சுற்றியுள்ள சமூகத்தால் பெருமளவுக்கு உருவாக்கப்படுகிறார். இவ்வாறிருக்கும் போதும் சில தனி மனிதர்கள் தாம் சார்ந்துள்ள சமூகத் துக்கே ஒரு புதிய வழிகாட்டுதலைத் தர வல்லவராயுள்ளனர். கேரளவர்மா, இராஜராஜவர்மா, சந்துமேனன், சிவி,இராமன் பிள்ளை போன்ற அறிவு வளர்ச்சியின் தலைவர்கள் ஆற்றிய பங்கினைப் புரிந்து கொள்ள நாம் மலையாள இலக்கியம் என்பது இந்திய இலக்கியத்தின் ஒருபகுதி என்பதையும் இந்திய இலக்கிய மும் இந்திய அரசியல் கலை வாழ்க்கைநிலைகளை அடிப்படையாகக் கொண்டதுதான் என்பதையும் உணர்ந்துகொள்ளவேண்டும். இலக்கியம் என்பது வாழ் க்கையின் அளவுக்குப் பெரிது என்னும் பெருமை படைத் துள்ளமையால், மரபு சார்ந்தவற்றைப் படம் பிடித்துக்காட்டி அதே நேரத்தில் வாழ்வின் புரட்சிகர கூறுகளைத்தட்டி எழுப்பிட வேண்டும்.

பிரிட்டிஷ் தாக்கம் மேலைநாட்டு நாகரிகத்தின் பளபளப்புடன் தொடங்கியது. ஆனால் உடனே அதன் தவிர்க்கவியலாத எதிர்ப்புவாதம் எழுந்தது. நம்முடைய சொந்த மரபுச் செழுமை பற்றிய நம் பெருமிதம் புத்தெ ழுச்சியுடன் மலர்ந்தது. இது ஒரு பொதுவான மறுமலர்ச்சியாக விளைந்தது. முதலில் அது மதம் மற்றும் பண்பாட்டுவகையில் மறுமலர்ச்சியாக ஆங்கிலக்கல்வி யின் துணையாகத் தோன்றியது. இந்த மறுமலர்ச்சியின்

காலமாக 1857-1905ஐ எடுத்துக்கொள்ளலாம். இரண்டாம் காலகட்டம் தேசியப் பேரெழுச்சிமற்றும் ஹோம் ரூல் கிளர்ச்சியின் சமகாலமாகும். (1905-1920) மூன்றாவது காலகட்டம் மிகத் தெளிவாகக் காணும் காந்தியப் புரட்சியாகும். (1920-1947)

இந்தக் காலகட்டங்கள் தத்தமக்குரிய கொந்தளிப்புகளைச் சற்றுத் தாமதித்தோ சற்றுமுன்னதாகவோ இலக்கியத்தில் ஏற்படுத்தின. இந்திய இலக்கியங்கள் அனைத்திலும் நாம் இதனைக் காணுகிறோம். நவீன விழிப்புணர்ச்சியின் மிக முக்கியக் காலகட்டம் இந்நூற்றாண்டின் இறுதிக்கு முன்னர் 15 ஆண்டுகளும் பின்னர் 15 ஆண்டுகளும் (1885-1915) என்பதைக் கேரள வரலாறு வெளிக்காட்டுகிறது. மேலைநாட்டுத் தாக்கம், இந்து மதத்திலிருந்து காலத்துக்கொவ்வாத பழையவழக்கங்களையும் மூட நம்பிக்கைகளையும் நீக்கவும், பெண்களின் நிலையை உயர்த்தவும், சாதிப் பிரிவு,பலதாரமணம் ஆகியவற்றைக் கண்டித்திடவும் உதவியது. கேரளத்தில் ஏற்பட்ட சமூக சமய விழிப்புணர்வு, அரசுப்பணிகளில் பிராமணத்தனியாதிக்கத்தை எதிர்த்துத் திருவாங்கூர் அரசரிடம் சமர்ப்பிக்கப்பட்ட மலையாள மெமோரியல் (1891) விண்ணப்பத்திலும், ஈழவ சமுதாயத்தின் குறைகளை விளக்கிக்காட்டி 1896ல் அளிக்கப்பட்ட 'ஈழவா மெமோரியல்' விண்ணப்பத்திலும், தெளிவாகத்தெரிகிறது, இந்த விழிப்புணர்வு விரைவிலேயே, ஈழவருக்காக நாராயணகுரு தந்த உள்ளார்வத்தில் எஸ். என் டி.பி.* யோகம் (1903) என்னும் அமைப்பு உருவாகவும், நாயர்களுக்காக மன்னத் பத்மநாபன் நிறுவிய நாயர் சர்வீஸ் சொசைட்டி (1914) உருவாகவும் வழிகோலியது. உச்சநிலையிலிருந்த சாதியாரான நம்பூதிரிகளும் அமைப்பு முறையில் ஒருங்

*s.n.d.p. yogam நாராயண தெய்வ பரிவாலன் யோகம்.

கிணைந்து 1908ல் யோகக்சேம சபாவைத் தம் சமுதாயச் சிக்கல்களைத் தீர்த்துக்கொள்ள உருவாக்கினர். இவற்றி லிருந்து அக்கால சமுதாயச் சூழ்நிலையை மதிப்பிடலாம். சிந்தனையாளர்களும் எழுத்தாளர்களும், சமுதாய நிலை களைப் பற்றியும், வாழ்க்கையிலும் இலக்கியத்திலும் ஏற்படவேண்டிய புரட்சிகரமான மாற்றங்களின் தேவை பற்றியும் ஆழ்ந்த ஈடுபாடு கொண்டிருந்தனர். சில எழுத் தாளர்கள் மற்றவர்களைவிட மாறுதலின் வீச்சை உணர்ந்தறிவதில் நுண்மைமிக்கவராய் இருந்தனர் என்பதில் ஐயமில்லை. ஒரு பொது மறுமலர்ச்சியின் தோற்றம் கருக் கொள்வதை இங்கே காண்கிறோம்.

## கேரள வர்மாவும் இராஜராஜவர்மாவும்

கேரளவர்மா தமக்குரிய வழியில் இலக்கிய மறு மலர்ச்சியின் சில அம்சங்களைத் தொடங்கி வைத்திருந் தாலும், ஒரு குறிப்பிட்ட அளவுக்கு மரபின் அழுத்தத் தால் அவர் பாதிக்கப்பட்டிருந்தார். ஆனால் இராஜராஜவர்மா ஒரு முழுப் புரட்சியின் தேவையை உணர்ந்திருந்தது மட்டுமின்றி ஆக்கபூர்வமான வழிகாட்டு தலையும் அளித்தார். தம் தலைமுறை எழுத்தாளர்களுக் குச் செல்லவேண்டிய இலக்கு பற்றிய கருத்தோட்டத்தையும் வழங்கினார். கேரள வர்மா இவ ருக்கு 18 ஆண்டுகள் மூத்தவராகவும் எனவே முந்தைய தலைமுறையைச் சேர்ந்தவராகவும் இருந்ததால் இந்த வேறுபாடு இயல்பானதே எனப் புரிந்து கொள்ளலாம். வேறுவகையிலும் கூட, அரசகுடும்பத் தொடர்பும் அவர் பெற்றிருந்த மாண்புமிக்க மேன்மையும் கேரளவர்மாவை வேறுவிதமான பீடத்தில் ஏற்றி வைத்திருந்தன. அவர் மிக மேல்நிலையில் இருந்தவரோடு மட்டுமே பழகிவந்தார். ஆனால் ஏ.ஆர். கல்வி நிறுவனங்களில் ஆசிரியராக இருந்ததால் எல்லாவகையான மக்களுடனும் பழக வேண்டி வந்தது. சாதி மற்றும் தகுதியைப் பார்க்காமல் எல்லோருடனும் பழகுவதில் அவர் மகிழ்வடைந்தார்.

இருவருக்குமிடையே பொதுத் தன்மைகள் பல இருந்த போதிலும் இருவரின் மனப்பாங்கும் சாதனைகளும் ஒன்றாக இருக்கவில்லை.

அவர்களுடைய தொடர்பும் மிகச் சிறப்பு வாய்ந்த ஒன்றாகும். அதுபோன்ற ஒன்று மலையாள இலக்கிய வரலாற்றில் எங்குமே காணக்கிடைக்கவில்லை. மாமாவும் மருமகனும் குருவும் சிஷ்யருமாக அதன் உண்மையான கருத்துப்பட விளங்கினர். மாமா மருமகனிடம் பேரன்பு பூண்டிருந்தார். மருமகனோ மாமாவிடம் பெரும் மரியாதை வைத்திருந்தார். மாமா, ஆலோசகராக, புரவலராக, ஆதரிப்பவராக விளங்கினார். இருவரும் ஏறத்தாழ ஒரே சூழலில் வளர்ந்தனர். இருப்பினும் அவர்கள் வேறுபட்டு அமைந்திருந்தனர். மிகப் பளிச் சென்று வேறுபட்டு இருந்தனர். மருகர் விரைவில் வளர்ந்தார். தனக்கே உரிய தனி ஆளுமையையும் தனிவலுவையும் உருவாக்கிக் கொண்டார். மாமா இவருடைய தனித்திறமைகளை அங்கீகரித்தார். இலக்கிய விவகாரங்களில் இவருடைய ஆலோசனைகளைக் கேட்டுப் பெறுமளவுக்கு அந்த அங்கீகாரம் நன்முறையில் இருந்தது. அவர்கள் இருவரும் ஒருவருடன் ஒருவர் மிகுந்த பாசத்துடனும் மிக அதிக அளவிலும் கூட்டுறவு கொண்டு அவ்வுறவு மலையாள இலக்கியத்தின் ஏடுகளில் ஒரு வரலாற்றுச் சிறப்பாக நிலைபெற்றது. இவற்றுக்கிடையே சிறு சிறு உரசல்கள், மறைமுக அறைகூவல்கள், புரிந்துணர்வின்மை ஆகியனவும் அவர்களது நீண்டகாலக் கூட்டுறவின்போது இருந்தன. ஆனால் அவை வேறுபட்ட கொள்கை அடிப்படையிலே எழுந்தனவே தவிர தனிமனிதப் பொறாமையாலோ வெறுப்பினாலோ எழுந்தவையல்ல.

சாகுந்தலத்தை தொடக்ககாலத்தில் மொழிபெயர்த்துத் தந்ததனாலும் காளிதாசனுடையது போன்ற கவிதைப் படிமங்களை உருவாக்கும் திறத்தாலும் கேரள

வர்மா "கேரள காளிதாசன் " என அழைக்கப்பட்டார். ஆயினும் சொல்லாட்சியில் அவருடைய இலட்சியக்கவி ஹர்ஷராவார். இராஜராஜவர்மாவைப் பொறுத்தவரை யில் காளிதாசனே கவிதை உள்ளடக்கத்திலும் உருவத்தி லும் அவரடைய இலட்சியக் கவிஞராக இருந்தார். முன்னரே சுட்டிக் காட்டியபடி கேரளவர்மா மணிப்பிர வாள நடையிலிருந்த தன் கவிதைகளில் சம்ஸ்கிருதச் சொற்களையும் மொழித்தொடர்களையும் பரவலாகக் கலந்திருந்தார். அவர் சொல்லணிகளிலும் எதுகைச் சொற்களிலும் மாறாத பிடிப்புடையவர். கவிதையின் புறவடிவத்திலும் சொல்லலங்காரத்தின் உயர்விலும் அள வுக்கதிகமாகவே கருத்துடையவராயிருந்தார். அவர் அவ்வப்போது அணியலங்காரத்தின் அழுத்தத்துக்குப் பணிந்துபோனார் என்றும் கூடக்கூறலாம். இவையிப் படி இருப்பினும் அவர் மிகத் திறம் வாய்ந்த கவிஞர். அறிவாற்றல் மிக்க கவிஞர். கவித்துவ நுட்பத்தில் இராஜராஜவர்மா தம் மாமாவுக்கு இணையாக வர இயலவில்லை. அவர் கல்வியாளராகத் திறனாய்வாள ராக விளங்கிக் கலையின்பால் சுவையை வளர்த்துக் கொண்டிருந்தார். அவருடைய சொல்லாட்சி எளிமையானது. அவரைப் பொறுத்தவரையில் கற்பனை யும் கவிதையின் உணர்ச்சிப் பெருக்குமே அணி அலங் காரத்தைவிட மிக முக்கியமானதாகத் தெரிந்தன. அவரது காலக்கவிஞர்களிடையே பரவலாக இருந்த மலிவான சொல் விளையாட்டுக்களை அவர் ஏளனம் செய்தார். அவருக்குக் கருத்திலும் உட்பொருளிலும் பல வகைச்சுவை, புதுமைமிக்க கற்பனை, கையாளும் முறை யில் வேறுபட்ட திறங்கள் இவை அனைத்துக்கும் மேலே கவிதை உணர்வின் கட்டற்ற வெளிப்பாடு ஆகியவையே வழிகாட்டும் மூலங்களாக விளங்கின. அவர் தொடங்கி வைத்து உறுதியாகத் தாங்கிநின்ற காலகட்டத்தின் கற்பனை அழகுணர்வு அதுதான். அவருடைய திறனாய் வுப் படைப்புக்களிலும் இந்தப் புதிய கருத்தோட்டம்

தெளிவாகத்தெரிகிறது. மாறுபட்ட கொள்கைகளுக்கி டையேயிருந்த மோதலின் அழுத்தம் ஓர் இலக்கியக் கருத் துமோதலைத் தோற்றுவித்து அது இலக்கியச் சுவைஞர்களிடையே பரபரப்பாக இருந்தது. அது நம்மு டைய தொடருக்குத் தொடர்புடையதாகையால் சுருக்க மாக அதைப்பற்றிக் குறிப்பிடுவோம்.

## எதுகை பற்றிய கருத்துப் போர்

பிற இந்திய மொழிகளைப் போலவே மலையாளத் திலும் கவிஞர்களால் பயன்படுத்தப்பட்ட பலவகையான எதுகைகள் இருந்து வந்தன. ஆனால் அவற்றிலே சிறப் பான ஒருவகை ஒவ்வோரடியிலும் இரண்டாம் அசை அல்லது எழுத்து எதுகையாக ஒன்றிவந்து 'துவிதியக்சர பிராச' என அழைக்கப்படுவது மலையாள மொழியின் பெருமபாலான கவிஞர்கள் விரும்பிப் பயன்படுத்துவ தாய் இருந்தது. ஏன் இந்த எதுகை மட்டுமே சிறப்பாகப் பயன்படுத்தப்பட்டு விரும்பப்பட்டது என்பது ஆய்ந்து காணவேண்டிய ஒன்று. ஆனால் அவ்வாறு ஏற்படுத்தப் பட்ட மரபு பல தலைமுறைகளாக எந்தக் குறைதலுமில் லாமல் தொடர்ந்து வந்தது. இந்த எதுகை நயம் கவர்ச்சியாக ஒலிக்கிறதென்பதில் ஐயமில்லை, ஆனால் இதனைப் பயன்படுத்தும் கட்டாயம் கவிதைப்படைப்பில் இதைவிடச் சிறப்புக்குரிய பல கூறுகள் சிதைந்திடக் காரணமாக அமைந்தது. இந்த இரண்டாம் எழுத்து ஒன்றிவரும் எதுகையைப் பயன்படுத்துவதால் வரும் நிறைகுறைகளைப் பற்றிய கவிஞர்களின் விவாதம் 1891ல் வெளியிடப்பெற்ற இலக்கிய இதழிலேயே நடை பெற்றது. முதன்மையான கவிஞர்கள் இது பற்றிய தம் அணுகுமுறைகளில் மாறுபட்டிருந்தனர். ஆனாலும் அடுத்த சில ஆண்டுகள் வரையில் அது கருத்துப் போராட்டத்தின் நிலையை அடையவில்லை. கேரள வர்மா இரண்டாம் எதுகையைத் தொடரவேண்டுமென்ற கருத்திலிருந்தார். ஏ.ஆர். அந்தக் கட்டாயத்திற்கு எதிராக

இருந்தார். அவருடைய கருத்துப்படி அது முதிர்ச்சியற்ற இலக்கியத்தின் தனி அடையாளமாகும்.

1908ல் இத்க் கருத்துவேறுபாடு ஒரு புயல்வேகச் சச்சரவின் நிலைக்கு உயர்ந்தது. இந்தச் சச்சரவு வெடித் திடக் காரணமான சூழ்நிலைகளை இங்கே சுருக்கமாகக் கொடுத்திடலாம். இந்தச் சிறப்பு எதுகையைத் தொடர்ந்து பயன்படத்துவதற்கு எதிரான வாதங்களை கேரளவர்மாவின் முன்னிலையில் எடுத்துக்கூறி அவரது உடனடியான மறுமொழியைப் பெறுவது ஒரு நல்ல யோசனை என்று இராஜராஜவர்மா நினைத்தார். இதற் கான வாய்ப்பு திருவனந்தபுரம் மகாராஜா கல்லூரி மலையாள சமாஜ ஆண்டுவிழா 1908ல் கொண்டாடப் பெற்றபோது கிடைத்தது. விழாவுக்குத் தலைமைதாங்க கேரளவர்மாவையும், விழவில் சிறப்புரைக்கு கவிஞர் கே.சி. கேசவபிள்ளையையும் அழைத்திடுமாறு சமாஜச் செயலாளர் பி. அனந்தன் பிள்ளையை இராஜராஜ வர்மா பணித்தார். இராஜராஜவர்மாவின் ஊக்கமிக்க துணைவராகப் பல கொள்கைப் போராட்டங்களில் ஈடு பட்ட கே.சி. கேசவபிள்ளை, அவரது கூட்டுறவுடன் 'பாஷாகவிதா' (மலையாளத்தில் கவிதை) பற்றிய ஆய்வுக்கட்டுரை தயாரித்து வாசித்தளித்தார். கட்டுரை யின் பொருள் பொதுவாக மலையாளக்கவிதை என இருந்தாலும் கட்டுரையின் மையக்கருத்து எதுகையைக் கட்டாயப்படுத்துவதற்கு எதிராக இருந்தது. அது வாதங் கள் மிக நன்கு அமையப்பெற்ற ஆராய்ச்சி உரை. விழாத் தலைவர் இந்த விசித்திர விளையாட்டையும் அதன் பின்னணித் தந்திரத்தையும் உடனே அறிந்துகொண்டார். ஆனாலும் அவர் கூட்டத்தில் உரையாற்றும்போது தாம் தயாரித்துவந்த சொற்பொழிவை எந்த மாற்றமுமின்றி வாசித்தார். மேலும் தற்செயலாக அந்த வாதங்களைத் தம் இயல்பான முறையில் சந்தித்தார். தமக்கு எதிரான கருத்திலுள்ளவர்கள் நல்ல கவிதையை எழுத

இயலாதவர்கள் என்ற கருத்தை வெளியிட்டார். மிக இனிய செய்யுள்கள் ஒவ்வோரடியின் இரண்டாம் அசையிலும் மெய்யெழுத்து உயிரெழுத்து இரண்டுமே ஒன்றி வர அமையும் என்று கூட அவர் வாதிட்டார். பின்னாளில் கேசவபிள்ளையின் கட்டுரை 'பாஷாபோஷிணி' இதழில் வெளியிடப்பட்டது. ஆனால் மறு இதழ் கேரளவர்மாவின் தலைமை உரையை மட்டுமின்றி கே.சி. கேசவபிள்ளையின் வாதங்களை மறுத்து கவிஞர் உள்ளூர் எஸ். பரமேஸ்வர அய்யர் எழுதிய கட்டுரையையும் தாங்கிவந்தது. இது ஒரு கடுமையான சச்சரவின் தொடக்கமாக அமைந்து அடுத்த மூன்றாண்டுகள் பத்திரிகைகளிலும் மேடைகளிலும் நடைபெற்ற கருத்துப்போரில் பல அறிஞர்களும் கவிஞர்களும் பங்கேற்றனர். மதிப்புமிக்க கவிஞர்கள் இந்த எதுகையைப் பயன்படுத்தியும் ஒதுக்கியும்சமஸ்யங்களும் கவிதைகளும் இருவகையான வாதங்களை ஆதரித்தும் எழுதினர். மருமகனின் செல்வாக்கில் ஆட்பட்டு, பெருந்தன்மை மிக்க கேரள வர்மா இந்தச் சிறப்பு எதுகையைப் பயன்படுத்தாமல் கைவயோகம் என்னும் நூலை இயற்றினார். ஆயினும் போர் தொடர்ந்தது. இரண்டாம் நிலைக் கவிஞர்கள் களத்தில் நுழைந்தனர். கடைசியாக இரு பக்கத்தினரும் இராஜராஜவர்மா இது பற்றிய ஒரு கட்டுரையை இருபக்கத்தினரும் ஒத்துப்போகும் உணர்வில் வெளியிட வேண்டுமென ஒத்துக்கொண்டனர்

## மரபும் புதுமையும் எதிர்நிலையில்

இந்த முரண்பட்ட கருத்துப்போராட்டத்தில் எழுந்த பல வேறுபாடுகளில் ஒன்றாக மட்டுமே எதுகை இருந்த போதிலும் போர் வெடித்தெழ மையமான காரணமாக அது இருந்தது. கவிதை இயற்றும் முறைகுறித்து மரபுவழியான அணுகுமுறைக்கும் நவீனகால அணுகுமுறைக்கும் இடையே நடந்த வலுவான போராக அது அமைந்

தது. மறுமலர்ச்சியின் உண்மையான இயல்பை அறிந்து கொள்ள, நாம் மரபு வாதிகள் மலையாளக் கவிதையின் இயல்புக் கூறுகள் என உண.ர்த்திக் கூறியவற்றை அடை யாளங்காணவேண்டும். அவை இங்கே சுருக்கமாகச் சுட்டிக்காட்டப்படுகின்றன.1

(1) ஒரு கவிதை நன்கு அறியப்பட்டபுராண அல்லது வரலாற்றுக் கதையின் மீது புனையப்படுகிறது.

(2) அது மிகவிரிவான வருணனைகள் நிறைந்ததாயிருக்க வேண்டும். அவற்றில் சில மாறாதவை.மலைகள், கடல், பருவகாலங்கள் முதலியன இன்றியமையாதவையாகக் கருதப்படுகின்றன.

(3) ஏராளமான அலங்காரங்கள் (சொல் பொருள் அணி கள்) இடம்பெற வேண்டும். எவ்வளவு அதீதக் கற்ப னையோ அவ்வளவு சிறப்பு.

(4) முதலெழுத்து ஒன்றிவரும் மோனையும், எதுகை நயமும் நல்ல கவிதையின் அடிப்படைக் கூறுகள். ஒவ்வோர் அடியின் இரண்டாம் எழுத்து ஒன்றிவர வேண்டியது கட்டாயம்.

(5) செய்யுள் யாப்பு வடிவங்களை சம்ஸ்கிருத யாப்பு வடிவங்களிலிருந்து தான் தேர்ந்தெடுக்க வேண்டும்.

(6) கவிதை வியப்புணர்வைத் தூண்டுவதாக இருக்க வேண்டும். ஒவ்வொரு செய்யுளும் கவிஞரின் கல்வித் திறத்தையும் செய்யுள் இயற்றும் வல்லமையையும் வாசிப்பவர் உணர்ந்திடுமாறு அமைய வேண்டும்.

வேறுவிதமாகக் கூறினால், கற்பனையைக்காட்டி லும் அணி அலங்காரம் மேலோங்கி இருந்தது. சம்ஸ்கி ருத அணிஅலங்காரம் மற்றும் சம்ஸ்கிருத

1. கே.எம். ஜார்ஜ் எழுதிய 'வெஸ்டர்ன் இன்ப்ளுயென்ஸ் ஆன் மலையா ளம் லாங்க்வேஜ் அன்ட் லிட்ரேச்சா. ([illegible]) (மலையாள மொழி மற்றும் இலக்கியத்தில் மேலைநாடுத தாககம்)

மகாகாவியங்களின் பெரும் செல்வாக்கு மேற்கூறப்பட்ட பண்புகளில் தெளிவாகத் தெரிகின்றது.

அசாதாரணமான மற்றும் சொலலாடலில் மேதா விலாசம் நிறைந்த செய்யுள்களை இயற்றுவதில் கவிஞர் கள் ஒருவருக்கொருவர் போட்டியிட்டனர். இயற்கையாகவே தேக்கநிலை ஏற்பட்டது. மறுமலர்ச்சி உணர்வை தம்மில் ஈடுபடுத்திக் கொண்ட இராஜராஜவர் மாவும் அவருடைய மனப்பாங்குடைய ஒருசிலரும் இந்தப் போக்கைத் தடுத்து நிறுத்த விரும்பினர். அவர்க ளுடைய கருத்துரையாளராக இராஜராஜவர்மா புதிய அணுகுமுறை பழையதிலிருந்து அடிப்படையாக வேறுப டும் கூறுகளை எடுத்துரைத்தார் அவை வருமாறு:

(1) மலையாளம் பெரும்பாலும் புறவயப்பட்ட (Objective) கதைகூறும் கவிதை (காவியம் மற்றும் இசைக்கதை) மற்றும் நாடகக்கவிதை (ஆட்டக்கதா) வகைகளை மட்டுமே கொண்டது. பாடும் பொருளைத் தேர்ந்தெடுப் பதில் எந்தக்கட்டுப்பாடும் இருக்கக்கூடாது. கவிஞரின் கற்பனையைச் சுடர்விடத்தூண்டும் எந்தப் பொருளும் கவிதைக்கு ஏற்ற பொருளே. ஒரு வரவேற்கத்தக்க மாற் றமாக, மேலைநாடுகளில் பரவலாக வழங்கும் அக வயப்பட்ட (Subjective) கவிதை அறிமுகப்படுத் தப்படவேண்டும்.

(2) வருணனைகள் அவற்றுக்காகவே புகுந்தப்படுவது விரும் பத்தக்கதல்ல, அவை கவிதையின் பரவலான உணர்வுக் கும் நோக்குக்கும் பயன்படுவதாக இருந்தால்மட்டுமே பொருந்தும்.

(3) அதிகப்படியான அலங்காரங்கள் கவிதையை வலிந்து கட்டியதாகவும் செயற்கையானதாகவும் மாற்றிவிடும். தவிர்க்கவியலாதவை எனக் கருதிக்கொண்டு சொல்லணி பொருளணிகளை வலிந்து நுழைக்கக்

கூடாது. அவை இயற்கையாகத் தோன்றுமானால் கவி தையில் இடம் பெறலாம். வேறு சொற்களில் கூறினால் நுரைத்துப்பொங்கும் அணிகளின் தாக்கத்திலிருந்து கவிதை விடுதலை பெற வேண்டும்.

(4) தக்க ஒலி நயமுள்ள சொற்களைத் தேர்ந்தெடுப்பது செய்யுளுக்கு மிகவும் உகந்ததே. ஆனால் தக்க ஒலிநயம் எந்திரத்தனமாகச் சுழன்றுவரும் சொல்லமைப்பிலோ, அல்லது ஒவ்வோரடியின் இரண்டாம் எழுத்து ஒன்றிவர வேண்டுமென்பதிலோ இருக்கிறதென்பது அற்பமானது. அத்தகைய கடுமையான இளக்கமில்லாத அமைப்புக்குப் பணிந்து செல்வது, இயற்கையான வாக்கிய அமைப்பை யும் நம் சொல்லாட்சியையும் தேவையற்ற இழுபறிக்கும் வலிந்த திருப்பங்களுக்கும், இழுத்துச் செல்லும்,.

(5) கவிஞனுக்குத் தான்விரும்பும் எந்த யாப்பு வடிவத்தையும் தேர்ந்தெடுக்கும் சுதந்திரம் இருக்க வேண்டும். இறுக்க மான சம்ஸ்கிருதயாப்பு வடிவங்களைத்தான் பின்பற்ற வேண்டுமென்ற தேவை இல்லை. நாட்டுப்பாடல்களிலி ருந்து உருவான மலையாளத்தின் சொந்த யாப்பு வடி வங்கள் அதிக இசைநயமும் இளகிய தன்மையும், உள்ளவையாக இருப்பதால் தன்னுணர்வுப் பாடல் களுக்கு (LYRICS) மிகவும் பொருத்தமானவையாக இருக் கும்.

(6) பழைய சாதனைகளின் மேல் புதியன உருவாக்குவது நல்லதே என்றாலும் எழுத்தாளர்கள் சம்பிரதாயமான வடிவங்களை நகல் எடுப்பவர்களாக மாறிவிடக்கூடாது. கவிதையில் இன்றியமையாதது கற்பனைத்திறம் (பாவம்) தானே தவிர அதீதக் (கற்பனை கல்பனா) அல்ல, தொழிற் திறத்தைக்காட்டிலும் கலைத்திறமே கவிதையில் முதன்மை பெற வேண்டும்.

இந்தச் சர்ச்சையில் அவரது பங்கு மிகப் பெருமை வாய்ந்த ஒன்றாயிருந்தபடியால் உருவாக்கப்பட்ட இந்தப்

புதிய கொள்கைகளுக்கு 'இராஜராஜவர்மா ப்ரஸ்தானம்' எனப் பெயரிடப்பட்டது.

**இலக்கியப் படைப்புக்கு ஒரு புதிய திசை காட்டல்.**

முன்கூறிய கொள்கைகள் கவிதைப்படைப்புக் களை நோக்கிச் சிறப்பாகக் கூறப்பட்டாலும், அவற்றின் பொதுவான உணர்வு உரைநடைக்கும் பொருந்துவதா கும், புதுமை மற்றும் கட்டுப்பாடற்ற விடுதலை உணர் வுக்கு அளிக்கப்பட்ட புதிய முக்கியத்துவம், இளையதலைமுறையால், குறிப்பாக ஆங்கிலம் கற்ற எழுத்தாளர்கள் மற்றும் இலக்கியத்தின் நுட்பச்சுவைஞர் களால் வரவேற்கப்பட்டது. வடிவமைக்கப்பட்ட கொள்கைகளையும் சுட்டிக்காட்டப்பட்டும் பாராட்டப் பட்டும் தரப்பட்ட எடுத்துக்காட்டுகளையும் கவனமாக ஆராயும்போது, மலையாளத்தில் இலக்கியம் படைப்பதற் கும் இலக்கிய நயம் பாராட்டுவதற்கும் ஒரு புதிய திசை மாற்றத்தை இராஜராஜவர்மா வழங்கியுள்ளார் என உணரலாம். கவிதையைப் பிடித்துச் சிறைசெய்திருந்த விதிகள், இலக்கணச் சூத்திரங்கள், மற்றும் பழமைவடி வங்கள் மீதான வறண்ட பிடிவாதம் ஆகியவற்றைப் புரட்சிகரமாகத் தகர்த்தெறிந்தார். கவிதையாக இருந்தா லும் உரைநடையாக இருந்தாலும் உள்ளுணர்வுக்கு வடி வமைப்பு அடிபணிந்து செல்லவேண்டுமென அவர் உறுதிபட முழங்கினார். பிற்போக்குவாதிகள் மற்றும் சம்பிரதாயப் பண்டிதர்களின் பனிப்போரின் முன் இது ஒரு மகத்தான செயலாகும். நவீன இலக்கியத்திற்கு இராஜராஜவர்மாவின் முதன்மையான பங்களிப்பாக இது அமைகிறது. மொழியமைப்பைப் பற்றிப் பார்க்கும் போது, ஒரு மிகச்சிறந்த இலக்கணத்தை எழுதி மொழியை அறிவியல் ரீதியாக ஆராய அடித்தளம் அமைத்து, அது காலத்தை வென்று நிற்குமாறு செய்துள் ளார் என்பதை முன்பே கண்டோம். கவிஞர் உள்ளூர் கூறியிருப்பதுபோல, இராஜராஜவர்மா கேரள மொழி

மற்றும் இலக்கியம் ஆகிய 'கைரளி' யின் அடித்தளத்தை உறுதிப்படுத்தி மேற்கட்டை அலங்கரித்துள்ளார். பல துறைகளின் முன்னோடியாகவும், தலைசிறந்த மேதையாக வும் அறிவுத்துறைகளின் கட்டறுத்த விடுதலை வீரராகவும் விளங்கினார். வேறெந்த அறிஞரையும்விட இவர்தான் கடந்த அரைநூற்றாண்டில் மலையாள இலக் கியத்தின் மகத்தான பேரெழுச்சிக்கு வழிஅமைத்தார். வேறுவிதமாகக்கூறினால் மலையாள இலக்கியத்தின் மறுமலர்ச்சி இயக்கத்தைத் தலைமைதாங்கி முன் நடத் தும் பொறுப்பை இவர் தாங்கவேண்டியதாயிற்று.

அவர் பெருமைமிக்கவராக விளங்கியது மட்டுமின் றிப் பிறரிடத்தில் அமைந்திருந்த பெருமையினைத்தேடி அடையாளம் காணவல்லவராகவும் அதனை வரவேற்றுப் பாராட்டுபவராகவும் விளங்கினார். படைப் புத்திறம் சூழ்நிலைகளால் ஒளிக்கப்பட்டோ புகைபடிந் தோ இருந்தபோதும் அதனைக் கண்டுணரும் வியக்கத்தக்க தனித்திறம் பெற்றிருந்தார் இவர். குமரன் ஆசானின் முதல் பெருங்கவிதையாகிய 'நளினி'யில் அமைந்திருந்த புனைவியல் 3 புதுமைப் போக்குகளை எவ்வளவு விரைவில் அடையாளம் கண்டார் என்பத னையும் அதனைத் தெளிவுமிக்க தடுமாறாத மொழிக ளில் எடுத்து முழங்கவும் விருப்பமிக்கவராகவும் இருந்ததை முன்னரே நாம் கண்டோம். அவர் தம் உடன் பணிபுரிந்தோர், மாணவர்கள், நண்பர்கள் மற்றும் உத விபுரியவந்தவர் அனைவருடனும் அவர் கொண்டிருந்த உறவு இலட்சிய பூர்வமாயிருந்தது. அவர்களுடைய வாழ்க்கைநிலை, சாதிமற்றும் மதம் பற்றி அவர் சற்றும் கருதிடவில்லை. அதனால்தான், அவர் அறிந்தோ அறி யாமலோ அவர் "தம்பிரான்" (அரசகுடும்ப உறவினர்) என்பதற்கும் மேலாக "மனிதன்" என்றும் நிலைபெற முடிந்தது என ஜோசப் முண்டசேரி குறிப்பிடுகிறார். அவருக்கிருந்த சமூக மற்றும் கல்வி உயர்வைப்பற்றிய

[3] *Romanticism*

மேல்நிலை உணர்வு சற்றும் இல்லாதிருந்தார் என்பது அந்த நாட்களில் எளிதான ஒரு விசயம் அல்ல. தன்னை அணுகிய, தகுதியும் முன்னேறும் திறமும் படைத்த அனைத்து எழுத்தாளர்களையும் அவர் பெருமளவில் முன்வந்து ஆதரித்தார். தன் உடன்பணியாளர்களுக்கும் நண்பர்களுக்கும் மன எழுச்சிக்குக் காரணமாயிருந்தார்.

நாம் இந்த நினைவு மலரை, குமரன் ஆசானின் நன்றி, மதிப்பு, பாசம் ஆகியன ததும்பிவழியும் புகழ்மிக்க இரங்கற்பாடல் ஆகிய ப்ரரோதனம்.[2]

பாடலைக் குறிப்பிட்டு நிறைவு செய்யலாம். ப்ரரோதனம் என்பதன் பொருள் அளவுகடந்த துக்கம் என்பதாகும். இந்தக் கவிதை ஒரு தலைசிறந்த கவிஞ ரால், ஒரு தலைசிறந்த மேதையும் புரவலரும் ஆகிய ஒருவரின்மீது எழுதப்பெற்ற, மலையாள மொழியிலுள்ள முதன்மையான இரங்கற்பாக்களுள் ஒன்றாகும். குமரன் ஆசானின் மன உயர்வுகளையும் நிலைப்பாடுகளையும் இராஜராஜவர்மாவைப் போல் புரிந்து கொண்டவர்கள் வேறு யாருமில்லை என அவர் உணர்ந்திருந்ததால் இராஜராஜவர்மாவின் மறைவு குமரன் ஆசானுக்குத் தாங்க் முடியாத துயரமாயிற்று. இதயச் சுமையைக் கட்ட விழ்க்க இரங்கற்பாடல் எழுதப்பட்டது.

இதோ அந்தப் பெருங்குணச் செம்மலுக்குச் சுலோக வடிவில் கவிஞரின் புகழ் அஞ்சலி:

*'தேவி கலைமகள் திருத்தாள் படையலாய்*
*என்றும் இளையாத அறிவைப் படைத்தாய்*
*என்றும் வறளாத பொன்மயப்பேனாபடைத்தாய்*
*நீ ஈட்டிய பெருமைகள் எத்தனை! எத்தனை!*
*காட்டிய அதிசயம் பலப்பல! பலப்பல!*

2 காண்க. அத்தியாயம் 9 'குமரன் ஆசான்' (சாகித்ய அக்காதெமி) ஆங்கில நூல் ஆசிரியர் கே.எம். ஜார்ஜ்.

கொள்கையின் கூரில், நடைமுறைநயத்தில்
எதிரிகள் கூட நாணி ஒளிந்தனர்.
அன்னை கைரளி ஒளிபடைத்து உயர்ந்தாள்!
விடுதலை பெற்ற மகிழ்வில் வாழ்த்தினாள்!'

தொடர்ந்துவரும் மலையாள எழுத்தாளர் தலைமுறைகளின் சார்பாகக் குமரன் ஆசான் இந்த ஒளி மிக்க நினைவஞ்சலியைக் காணிக்கை ஆக்குகிறார்.

'எல்லா வற்றையும் இழந்து போவதும்
விதியின் விசையில் பணிந்து வீழ்வதும்
ஈமத் தீயில் வாழ்வை முடிப்பதும் --
இவையே இறைவனின் ஆணையாய் இருக்கலாம்
ஆனால் நாங்கள் உன்
புனிதப் பெயரைப் பயிராய் நடுவோம்
கண்ணீர் பாய்ச்சிக் காத்து வளர்ப்போம்
அது .....வளரும்: பரவும்: வளரும்: பரவும்.
பூக்களின் வாசமாகிய புனிதக் கரங்களால்
எல்லாப் பக்கமும் ஆசிகள் கூறும்!
ஊழித் தீயின் இறுதித் தாண்டவம் கூட --
அதனைத் தீண்ட முற்படாது.'

* * * * * *

## வாழ்க்கை நிகழ்ச்சிகள் அட்டவணை

| | |
|---|---|
| 1863 | சங்கணா சேரியில் பிறப்பு |
| 1865 | குடும்பம் கார்த்திகப்பள்ளிக்கு இடம் மாறுதல் |
| 1877 | கேரளவர்மாவின் தனிப்பயிற்சி தொடங்குகிறது. |
| 1881 | மகாராஜா உயர்நிலைப்பள்ளியில் சேர்தல் |
| 1885 | **துலாபார பிரபந்தம்** |
| 1888 | **தேவிதண்டகம், பங்கவிலாபம்** |
| 1889 | பி.ஏ. பட்டம் (1889-திருமணம்) **விதவிபவரி, மேகோபாலம்பம்** |
| 1890 | சம்ஸ்கிருதப் பள்ளியில் பணியேற்றல் |
| 1891 | சம்ஸ்கிருதத்தில் எம்.ஏ. பட்டம் |
| 1892 | **பித்ரு பிரலாபம்** |
| 1894 | **மேகதூத்** (மொழிபெயர்ப்பு) சம்ஸ்கிருதக் கல்லூரி முதல்வர் ஆதல் **குமாரசம்பவ** (மொழி பெயர்ப்பு) |
| 1895 | **மலயவிலாசம்** |
| 1896 | **கேரள பாணினீயம்** (முதல் வடிவம்) |
| 1899 | கீழ்த்திசைக் கல்விக்கண்காணிப்பாளர் மகாராஜா கல்லூரி திருவனந்தபுரம். |
| 1900 | **ஆங்கில சாம்ராஜ்யம்** |
| 1902 | **பாஷா பூஷணம், சப்த சோதினி** |
| 1905 | **நளசரிதம்** சொற்பொருள் விளக்கம் **விருத்தமஞ்சரி** |
| 1906 | **பிரதம வியாகரணம்** |
| 1907 | **மத்யம வியாகரணம்** |

1908 எதுகை பற்றிய கருத்துப்போர்

1909 **மணிதீபிக**

1910 **லகுபாணினீயம்:** பேராசிரியர் சம்ஸ்கிருத மற்றும் திராவிட மொழிகள், மகாராஜா கல்லூரி.

1911 **சாகித்ய சாஹ்யம்**

1912 **மலையாள சாகுந்தலம்**

1914 முதல்வர் (பொறுப்பு), மகாராஜா கல்லூரி.
உறுப்பினர்,பாஷாபரிஷ்கரண குழு

1915 கேரளவர்மா காலமாதல்

1916 முதல்வர் (பொறுப்பு) மகாராஜா கல்லூரி
**மாளவிகாக்னிமித்ரம்** (மொழி பெயர்ப்பு)

1917 **கேரளபாணினீயம்** (திருத்தப்பட்ட வடிவம்)
**சாருதத்தம்** (மொ.பெ.)

1918 **ஸ்வப்ன வாசவ தத்தம்** (மொ.பெ.) காலமாதல்

# தேர்ந்தெடுத்த நூற்பட்டியல்.

## மலையாளம்.


| | |
|---|---|
| அனந்தன் பிள்ளைபி.. | கேரளபாணினி (1934) |
| பாகீரதி அம்மா தம்புராம், எம். மற்றும் இராகவ வர்மா, எம் | ஏ.ஆர். இராஜராஜவர்மா (3 தொகுதிகள்: 1953, 1961, 1963) |
| ஹரி சர்மா, ஏ.டி. | ரண்டு சாகித்ய நாயகன்மார் (1937) |
| ஜோசப் முண்டேசேரி, | ராஜராஜன்டே மாற்றொலி (1961) |
| உள்ளூர் பரமேஸ்வர ஐயர்,எஸ் | கேரள பாஷா சாகித்ய சரித்ரம்.தொகுதி 5 (1957) |


## ஆங்கிலம்


| | |
|---|---|
| கே.எம். ஜார்ஜ் | எ சர்வே ஆஃப் மலையாளம் லிட்ரேச்சர் (1968) |
| கே.எம். ஜார்ஜ் | வெஸ்டர்ன் இபுளுயென்ஸ் ஆன் மலையாளம் லாங்க்வேஜ் அன்ட் லிட்ரேச்சர் (1972) |


***

மலையாள இலக்கியத்தின் பொற்காலம் என்பது 1850ம் ஆண்டு முதல் வந்த நூறு ஆண்டுகள் ஆகும். ஏனெனில் இந்தக் காலகட்டத்தில்தான் கேரளவர்மா, ஏ. ஆர். இராஜராஜவர்மா, சந்து மேனன், சி.வி. இராமன் பிள்ளை மற்றும் முப்பெரும் கவிமணிகளாகிய ஆசான், உள்ளூர், வள்ளத்தோல் ஆகிய பேரறிஞர்கள் மகத்தான இலக்கியங்களைப் படைத்தளித்தனர்.

கேரளவர்மாவும் இராஜராஜவர்மாவும் உள்ளபடியே இலக்கியச் சிகரங்கள் ஆவர். இராஜராஜவர்மாவிடத்தில் நாம் நுண்ணறிவும் படைப்புத்திறனும் சேர்ந்துவிளங்கும் அரிய இணைப்பைக் காண்கிறோம். அவர் கேரளத்தின் உந்துசக்தியாய் விளங்கினார்.

இந்தத் தனிநூல் இலக்கிய அறிஞரும் புகழ்மிக்க திறனாய்வாளரும் சாகித்திய அக்காதெமியுடன் பல்வகைப் பொறுப்புகளில்இணைந்திருந்தவருமான டாக்டர் கே. எம். ஜார்ஜ் அவர்களால் எழுதப்பட்டது. ஆங்கிலத்திலும் மலையாளத்திலும் பல நூல்களைப் படைத்துள்ள அவர் சாகித்திய அக்காதெமிக்காக 'குமரன் ஆசான்' பற்றிய இத்தகைய தனிநூலையும் 'மலையாள மொழி, இலக்கியத்தில் மேலைநாட்டுத் தாக்கம்' என்னும் ஆழ்ந்த ஆய்வு நூலையும் படைத்தளித்துள்ளனர்.

A.R. Raja Raja Varma (Tamil) Rs. 15

ISBN-81-7201-247-0